Regd. M. No. 5934 Phone: No. 2184

# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்
JANASAKTHI
(வெளியூர் பதிப்பு)





மலர் 16 இதழ் 110] சென்னை 7-12-59 விகாரி௵ கார்த்திகை௴ 21உ திங்கட்கிழமை [4 பக்கங்கள் 7 காசுகள்


# இந்தியாவும் சீனவும் நேப்பாளத்தின் நண்பர்களே

## சமாதான பூர்வமாகவே எல்லா பிரச்னைகளுக்கும் தீர்வு காணவும்

### நேப்பாளப் பிரதமர் வற்புறுத்தல்

காத்தமண்டு, டிச. 5—

**இந்தியாவும் சீனவும் நேப்பாளத்தின் அண்டை நாடுகள்; நட்புறவுகொண்ட நாடுகள்; உலகமே சமாதான திசைவழியில் செல்லும்போது ஆசிய நாடுகளும் சமாதான பூர்வமாகவே பிரச்னைகளுக்குப் பரிகாரம் காண முயல வேண்டும்; பதட்ட நிலை தணியவேண்டும். நேப்பாளம் இந்தியாவுடனும் சீனவுடனும் செய்துகொண்ட நட்புறவை காப்பாற்றியே தீரும் என்று நேப்பாளப் பிரதமர் கூறினர்.**

இதர நாடுகளோடு செய்து கொண்ட எல்லா ஒப்பந்தங்களையும் கூட்டு உடன்படிக்கைகளையும் நேப்பாளம் மதிக்கும் என்று நேப்பாள முதல் மந்திரி பிவோர் பிரசாத் கொய்ராலா இன்று இங்கு கூறினர்.

இங்கு ஒரு பெரிய பொதுக்கூட்டத்தில் பேசும்போது அவர் எச்சரிக்கையுடனும், நிதானத்துடனும் நடவடிக்கைகள் எடுக்க வற்புறுத்தினர். தற்போது, ஆசியாவின் பதட்ட நிலையில் நேப்பாளம் உணர்ச்சி வசப்பட்டு எதையும் செய்யாதென்ருர். 'நேப்பாளத்தின் மீது தாக்குதல் இந்தியாவின் மீது தாக்குதலாகும்' என்று சமீபத்தில் நேரு குறிப்பிட்டதை ஒட்டி நேப்பாளத்தில் சிலவிடங்களில் கண்டன ஆர்ப்பாட்டங்கள் நடைபெற்றதைக் கருத்தில் கொண்டு நேப்பாள பிரதமர் அவ்விதம் கூறினர்.

#### அண்டை நாடுகள் சினேகத்துடன் வாழ வேண்டும்

இந்தியாவுடனும், சீனத்துடனும் நேப்பாளம் 'நட்புறவு கொண்டுள்ளது; சினேகபூர்வமான உடன்பாடு செய்துள்ளது. சினேகிதர்களான அண்டை நாட்டவர்கள் சமாதானமான முடிவுக்கு வரவேண்டுமென்று நேப்பாளம் இயற்கையாகவே எதிர்பார்க்கிறதென்ருர்.

#### சமாதான மூலமே தீர்வு

உலகத்தின் மாபெரும் இரு முகாம்கள் உச்சகட்ட மகாநாட்டில் சந்திக்கும் வேளையில், சமாதான முயற்சிகள் இதர பாகங்களில் நடைபெற்றுக் கொண்டிருக்கும் நேரத்தில் ஆசியாவும் தகராறை சமாதான முறையில் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்ருர்.

நேப்பாளத்தைப் பொருத்தவரையில் தேசிய புனர்நிர்மாணம் தான் உடனடி பிரச்னையாகும். இக்குறிக்கோளை அடைவதற்கு தங்களின் சக்திகளையெல்லாம் ஒன்று திரட்டி அர்ப்பணிக்குமாறு மக்களை அறைகூவி அழைத்தார்.

செய்தி போக்குவரத்து மந்திரி கணேஷ்மன் சிங், பேசியபோது குறிப்பிட்டதாவது:—

பாராளுமன்றத்தில் நேரு அண்மையில் வெளியிட்ட அறிக்கை 1950 ஒப்பந்தத்திற்கு இணக்கமானதே என்ருர். (பி. டி. ஐ)

### சீன வர்த்தகர் கைது

ஜகர்தா, டிச. 4—

மே. ஜாவாவில் ஏராளமான சீனக் கடைக்காரர்கள் கைது செய்யப்பட்டுள்ளார்கள்.

"பாதுகாப்புக் காரணங்களுக்காக" தங்கள் கடைகளை மூடிவிட்டு, தாங்கள் தங்கியுள்ள கிராமங்களை விட்டு வெளியேற வேண்டுமென்று இந்தோனேஷிய சர்க்கார் விடுத்த உத்தரவை இவர்கள் நிறைவேற்றவில்லையென்றும் அதனுல்தான் கைது செய்யப்பட்டார்கள் என்றும் கூறப்படுகிறது.

### தலாய்லாமா-ஐக் சந்திப்பு இல்லை

புதுடில்லி, டிச. 4—

இந்தியாவிற்கு விஜயம் செய்யவிருக்கும் அமெரிக்க ஜனதிபதி ஐசன்ஹோவர்-தலாய்லாமா சந்திப்பு நடைபெறுது என்று தெரிகிறது. ஐசன்ஹோவரை சந்திப்பதற்கு தலாய்லாமா விருப்பம் தெரிவித்திருந்தபோதிலும் கூட, இந்திய சர்க்கார் இதற்கு இணங்கவில்லை என்று தெரிகிறது.

(இந்தியாவில் அகதியாயிருப்பதின் காரணமாக தலாய்லாமா ஐசன்ஹோவரைச் சந்திக்க வேண்டுமென்ருல் இந்திய சர்க்கார் மூலமாகத்தான் இது ஏற்பாடு செய்யப்படவேண்டும்)

ஆகவே தன் விருப்பம் நிறைவேருது என்று தெரிந்த தலாய்லாமா, "சீச்சீ இந்தப் பழம் புளிக்கும்", என்றதோரணையில், மேற்படி யோசனையைக் கைவிட்டு புத்தமத ஸ்தலங்களுக்குத் தீர்த்த யாத்திரை கிளம்பிவிட்டதாகத் தெரிகிறது.

### புதிய மகாராஷ்டிரம் பம்பாய் ராஜ்யம் என அழைக்கப்படும்

#### எஸ். கே. பாடீல் கூற்று

பம்பாய், டிச. 5—

1960 ஏப்ரலில், தற்பொழுதுள்ள பம்பாய் ராஜ்யம், மொழிவழியாகப் பிரிக்கப்படப் போகிறதல்லவா? அப்பொழுது சம்யுக்த மகாராஷ்டிரமாகப் பிரியும் பகுதிக்கு 'பம்பாய் ராஜ்யம்' என்றே பெயரிடப்படும் என்று யூனியன் உணவு விவசாய அமைச்சர் திரு. எஸ். கே. பாடீல் கூறினர். இரண்டாவது அகில இந்திய ஓட்டல்கள், சிற்றுண்டி சாலைகள், கன்வென்ஷனை ஆரம்பித்துவைத்துப் பேசுகையிலேயே மேற்கண்டவாறு கூறினர்.



கேரள கம்யூனிஸ்ட் கட்சி மாநாட்டை ஒட்டி திருச்சூரில் நடைபெற்ற பிரம்மாண்டமான கூட்டத்தில் கொட்டும் மழையிலும் கூடி நின்ற பெண்கள் பகுதி.

## லாரியில் கடத்தப்பட்ட உரமூட்டைகள் பிடிபட்டன

### கம்யூனிஸ்ட் கட்சியின் முயற்சி

செங்கற்பட்டு, டிச. 2—

ஒரு லாரியில் செயற்கை ரசாயன உரம் ஏற்றப்பட்டு, கடத்திச் செல்லப்படுவது கண்டுபிடிக்கப்பட்டது.

லாரியில் சில ரசாயன உர மூட்டைகள் கள்ளத்தனமாகக் கடத்திச் செல்லப்படுவதை அறிந்த கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் சி. ஆர். நரசிம்மன் டெபுடி தாசில்தாருக்கு தகவல் கொடுத்தார். பின்னர் அவருடைய உதவியுடனும், மற்றும் இருவரின் உதவியுடனும் கடத்திச் செல்லப்படவிருந்த உரமூட்டைகளுடன் லாரியை போலீசில் ஒப்படைத்தனர்.

உரமூட்டைகள் செங்கல் பட்டிலிருந்து திண்டிவனத்திற்குக் கடத்திச் செல்லப்பட விருந்ததாகத் தெரிகிறது. கடத்திச்செல்ல முயற்சித்தவர்கள் மீது வழக்குப் பதிவு செய்யப்பட்டிருப்பதாகவும் மேற்கொண்டு விசாரணை நடைபெற்று வருவதாகவும் தெரிகிறது.

#### சப்கலெக்டருடன்சந்திப்பு

தோழர்கள் சி. ஆர். நரசிம்மன், எம். ஏ. வாஹித் ஆகியோர் செங்கற்பட்டு தாசில்தாரையும், சப்கலெக்டரையும் சந்தித்துப் பேசினர். உரவிநியோக ஊழல்கள் பற்றி எடுத்துக் கூறினர்கள் சப் கலெக்டரிடம் லைசென்சு பெற்ற வியாபாரிகள் உர மூட்டைகளை மொத்தமாக கள்ளச் சந்தையில் விற்றுவிடுவதாகவும், சில ஆதாரங்களோடு எடுத்துக் கூறினர். சப் கலெக்டர் விசாரணை செய்து நடவடிக்கை எடுப்பதாக வாக்குறுதியளித்தார்.

### வரவேற்பாராம்! மொரார்ஜி கூறுகிருர்

கல்கத்தா, டிச. 5—

அன்னிய முதலாளிகள் இந்தியாவில் முதலீடு செய்வதை வரவேற்கிறோம் என்று இந்திய நிதி அமைச்சர் மொரார்ஜி தேசாய் நேற்று கூறினர்.

இந்தியப் பெரு வியாபாரிகளின் ஆண்டு விழாக் கூட்டத்தில் பேசுகையிலேயே அவர் மேற்கண்டவாறு கூறினர். அவர்மேலும் கூறுகையில் விவசாயத் துறையிலும் தொழில் துறையிலும் இந்தியா முன்னரைவிட முன்னேறியிருப்பதாகவும், எனினும் உணவு உற்பத்தி திருப்திகரமான முறையில் இல்லை என்றும் கூறினர்.

### பி. இ., பி. எஸ். எஸ்ஸி தேர்வு முடிவுகள்

சென்னை, டிச. 6—

சென்னைப் பல்கலைக் கழகம் பி. இ. பி. எஸ். எஸ்ஸி (பாகம் 2) தேர்வு முடிவுகள் (செப்டம்பர் நவம்பர்) டிச. 8-ல் ஸ்தல பத்திரிகைகளில் பிரசுரிக்கப்படும் அன்று பகல் 2 மணிக்கு பல்கலைக் கழக கட்டிடத்திலும் முடிவுகள் வெளியிடப்படும்.

### மொழிவாரி (பம்பாய்) ராஜ்யங்கள் அமைப்பு

#### சஞ்சீவிரெட்டி வரவேற்கிருர்

பம்பாய், டிச. 5—

பம்பாய் மாகாணத்தை இரண்டு மொழிவாரி ராஜ்யங்களாகப் பிரிக்க வேண்டுமென்ற காங்கிரஸ் கமிட்டி முடிவு செய்திருப்பது வரவேற்கத்தக்க நல்ல முடிவு என்று குறிப்பிட்டார் காங்கிரஸ் தலைவர் சஞ்சீவிரெட்டி. சஞ்சீவிரெட்டி பத்திரிகை நிருபர்கள் மத்தியில் பேசுகையில் இவ்வாறு குறிப்பிட்டார் மொழிவாரி ராஜ்ய அடிப்படையை ஒப்புக்கொண்டுவிட்டால், குஜராத்தி, மராத்தி மொழி பேசுகின்ற மக்கள் தனித்தனி மொழிவாரி ராஜ்யங்கள் அமைக்கவேண்டுமென்ற அவர்களின் உணர்ச்சிகளுக்கும் மதிப்புக்கொடுக்கப்பட வேண்டும் என்பது சரியே என்று அவர் குறிப்பிட்டார்.

### சென்னை உயர்நீதி மன்றம் புதிய நீதிபதி நியமனம்

புதுடில்லி, டிச. 5—

சென்னை உயர்நீதி மன்றத்தின் நிரந்தர நீதிபதியாக இம்மாதம் 15-ஆம் நாள் முதல் அட்வொகேட் கோவிந்தராஜபுரம் திரு. ரங்கய்யா ஜகதீசனை ஜனதிபதி நியமித்துள்ளார். இத்தகவலை உள்துறை அமைச்சராலயம் அறிவித்துள்ளது.

## காங்கிரஸ் தேர்தலில் அடிதடி!

### வாக்குப் பெட்டிகள் மறைந்த மாயம்

#### போலீஸ் பாதுகாப்பில் தேர்தல் நடைபெற்றது

பாட்னு, டிச. 5—

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி மெம்பர்களைத் தேர்ந்தெடுப்பதற்கு பீகாரில் தேர்தல் நடைபெற்றது. தேர்தலின் போது நடைபெற்ற பலருசிகரமான சம்பவங்களைப் பற்றிய தகவல்கள் கிடைத்திருக்கின்றன. எதிர்க்கட்சிக்காரர்களிடம் கலகம் செய்து பழக்கப்பட்டவர்கள், இப்பொழுது தங்களுக்குள்ளேயே கலகம் செய்ய ஆரம்பித்து விட்டார்கள்.

#### போலீஸ் பாதுகாப்பு

பீகார் காங்கிரஸ் தேர்தலின் போது பல இடங்களில் காங்கிரஸ்காரர்கள் ஒருவருக்கொருவர் கலகம் செய்து கொண்டார்கள். தர்பங்கா மாவட்டத்தில் ஜன்ஜாபூரில் ஆயுதம் தாங்கிய போலீஸ்காரர்களின் பாதுகாப்பின்கீழ் காங்கிரஸ் உறுப்பினர் தேர்தல் நடைபெற்றது! இரண்டு கோஷ்டியாரும் கைகலந்து கொண்டதால், அரசாங்க காரியாலயமான சமுதாய அபிவிருத்தி திட்ட அலுவலகத்தில் வாக்குப் பெட்டிகள் உடைக்கப்பட்டு, வாக்குகள் எண்ணப்பட்டன!

#### மறைந்த மாயம்

தேர்தல் அதிகாரி இரவில் ரயிலில் பயணம் செய்துகொண்டிருந்தார். அப்பொழுது அவரிடமிருந்து தேர்தல் அபேட்சகர்களின் அபேட்சா பத்திரங்கள் மாயமாய் மறைந்துவிட்டன. தேர்தலில் தோல்வியுற்ற ஒரு அபேட்சகர்தான் ரயிலில் திருடியிருக்க வேண்டுமென்று சந்தேகப்படுகிருர்களாம். தேர்தல் அதிகாரி களவு கொடுத்ததுபற்றி போலீசிலும் புகார் செய்துள்ளதாகத் தெரிகிறது.

#### வாக்குப் பெட்டிக்கு நேர்ந்த கதி!

ஏற்கனவே தேர்தல் நடைபெற்றதில் திருப்திப்படாத தேர்தல் அதிகாரி மீண்டும் தேர்தல் நடைபெற வேண்டுமென்று வற்புறுத்திக்கொண்டிருந்தார். ஆனுல் அவர் வற்புறுத்திக் கொண்டிருக்கும்பொழுதே ஒரு வாக்குப்பெட்டி எங்கோ மறைந்து போய் விட்டது. வாக்குப்பெட்டி தூக்கிச்செல்லப்பட்டதைக் கண்டு வருத்தமடைந்த மாவட்ட தேர்தல் அதிகாரி, மறுதேர்தல் வேண்டாமென்று கூறிவிட்டு பீகாருக்குப் போய்விட்டார். அங்கு அவர் மாநில காங்கிரஸ் கமிட்டியில் புகார் செய்திருப்பதாகக் காணப்படுகிறது.

பீகார் காங்கிரஸ் தேர்தலில் மாநில காங்கிரஸ் தலைவர் தலையிடுகிருர் என்று குற்றம்சாட்டி ஹஸாரிபாகிலிருந்து மூன்று மண்டல் காங்கிரஸ் தலைவர்கள் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு தந்தி கொடுத்திருக்கிருர்கள். ராஞ்சி ஜில்லாவைச் சேர்ந்த சில காங்கிரஸ் பிரமுகர்கள் நேரடியாகவே டில்லிக்குப் போயிருக்கிருர்கள். அவர்களும் மாநில காங்கிரஸ் தலைவர் மீது குற்றம் சாட்டியுள்ளார்கள்.

### வறுமையால் ஏற்படும் தொல்லை பற்றி நேரு

புதுடில்லி, டிச. 5—

"இன்று உலகத்தின் ஒரு பகுதி அதிகசெல்வத்தாலும் பிறிதொரு பகுதி அதிக வறுமையாலும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறது. அதனுல்தான் புதிய கஷ்டங்களும் பிரச்சினைகளும் எழுகின்றன" என்று பிரதமர் நேரு நேற்று கூறினர்.

சர்வதேச விவசாயிகள் மகாநாட்டின் இறுதி நாள் விழாவில் பேசுகையிலேயே அவர் அவ்வாறு கூறினர். இம்மாநாட்டில் 28 நாடுகளிலிருந்து நூற்றுக்கு மேற்பட்ட பிரதிநிதிகள் கலந்து கொண்டார்கள்.

### டுலீப்சிங்ஜி காலமானர்

பம்பாய், டிச. 5—

பப்ளிக் சர்வீஸ் கமிஷன் தலைவர் மகாராஜ் கே.எஸ். டுலீப்சிங்ஜி இன்று காலமானர். இருதய நோய் காரணமாக அவர் காலமானர்.

### ஹங்கேரிய எல்லையில் ஒற்றர்கள் பிடிபட்டார்கள்

புடாபெஸ்ட், டிச. 5—

ஹங்கேரிய எல்லையில் பல ஒற்றர்கள் கைது செய்யப்பட்டுள்ளார்கள் என்று ஹங்கேரிய உள்நாட்டுத் துறை அமைச்சர் பெல்லா பிஷ்க்கு கூறினர்.

அவர்கள் நன்கு பயிற்சிகொடுக்கப்பட்டு, ஹங்கேரிய எல்லைக்கு அனுப்பப்பட்டவர்கள் என்றும், அவர் கூறினர்.

## பிரான்சுடன் பேச்சுவார்த்தை நடத்த சிறையிலுள்ள அல்ஜீரியத் தலைவர்களுக்கு உரிமையுண்டு

### ஐ. நா. வில் இந்தியப் பிரதிநிதி ஆதரவு

ஐக்யநாடுகள், டிச. 4—

அல்ஜீரியாவுக்கு சுயநிர்ணய உரிமை கொடுக்கவும், அங்கு போரை நிறுத்தவும் தான் தயார் என்று பிரெஞ்சு அதிபர் டிகால் தெரிவித்திருந்தாரல்லவா? அது சம்பந்தமாகப் பிரெஞ்சு சர்க்காருடன் பேச்சு வார்த்தை நடத்துவதற்கு, தற்பொழுது சிறையிலுள்ள அல்ஜீரிய விடுதலை இயக்கத் தலைவர்களை நியமிப்பதற்கு அல்ஜீரியத் தற்காலிக சர்க்காருக்கு உரிமையுண்டு, என்று ஐ. நா. வில் இந்தியத் தூதுக்குழுவின் உறுப்பினரான திரு. ஆர் வெங்கட்ராமன், இன்று ஐ. நா. பொதுச் சபையின் அரசியல் கமிட்டியில் பலமாக ஆதரித்துப் பேசினர். இது சம்பந்தமாகப் பிரெஞ்சு சர்க்கார் தயங்குவதாகத் தெரிகிறது. அல்ஜீரிய சர்க்கார், பேச்சுவார்த்தைக்கென நியமிக்கப்பட்டுள்ள தலைவர்கள் விடுதலை இயக்கத்தின் பிரபலமான தலைவர்களாவர். அவர்கள் மக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமானவர்களும், அவர்களைப் பிரதிநிதித்துவப்படுத்துவதற்குத் தகுதியானவர்களும் ஆவர். அவர்கள் அல்ஜீரியாவில் போரரங்கத்தில் இல்லாமல் பிரான்சில் சிறைகளில் இருப்பதின் காரணமாக, அவர்களுடன் பேசுவதற்கு பிரெஞ்சு சர்க்கார் தயங்குவது சிறிது வியப்பாகவே இருக்கிறது, என்றும் திரு. ஆர். வெங்கட்ராமன் குறிப்பிட்டார்.

ஆகவே பிரான்ஸ் தன்னுடைய போக்கை மாற்றிக் கொள்ள வேண்டும், என்று வெங்கட்ராமன்வேண்டுகோள் விடுத்தார்.

### பொது வாழ்விலிருந்து நேரு விலகவேண்டுமாம்!

#### ஜெயப்பிரகாஷ் கூற்று

லண்டன், டிச. 5—

பிரதமர் நேரு, பொது வாழ்விலிருந்து விலகிக் கொள்வது நலலது என்று சர்வோதய பிரமுகர் ஜெயப்பிரகாஷ் நாராயணன் கூறினர்.

"நேரு ஒரு பெரிய மரம்போல் இருக்கிருர். மரத்தின் நிழல் தங்குவதற்கு சுகமாக இருந்தாலும், அந் நிழலின் கீழ் எதுவும் வளர முடியாது" என்றும் அவர் கூறினர்.

### இத்தாலிய தலைவர்களுடன் ஐசனேவர் சந்திப்பு

#### உச்சகட்ட மாநாடு பற்றி விவாதம்

ரோம், டிச. 5—

இத்தாலிய அரசாங்கத் தலைவர்களுக்கும் அதிபர் ஐசனேவருக்கும் இன்று நடைபெற்ற பேச்சுவார்த்தைகளில் உச்சகட்ட மாநாடு பற்றிய விஷயங்களே பிரதானமாக இருந்தன. இரண்டாவது நாளாக இத்தாலித் தலைநகரில் தங்கியுள்ள ஐசனேவர் முக்கியமாக கிழக்கு-மேற்கு நாடுகளின் உறவுகளைப் பற்றி விவாதித்தார் எனலாம். காலையில் இத்தாலியப் பிரதமர் அந்தோணியோ ஸெனியுடன் அவர் பேச்சுவார்த்தைகள் நடத்தினர். மாலையில் ஜனதிபதி ஜி. குரோன்சியை அதிபர் ஐசனேவர் சந்தித்தார். அப்போது இத்தாலிய வெளிநாட்டமைச்சரும் பேச்சுவார்த்தைகளில் கலந்து கொண்டார்.

# வருமான வரி கட்டாதவர்களை அம்பலப்படுத்த வருமான வரிச் சட்டம் திருத்தப்படும்

## மக்கள் சபையில் அமைச்சர் அறிவிப்பு

புதுடில்லி, டிச. 5—

வருமான வரி சட்டத்தை திருத்துவதற்கான நடவடிக்கைகளை அரசாங்கம் வெகு விரைவில் எடுத்துக்கொள்ளும் என்று அமைச்சர் மொரார்ஜி தேசாய் நேற்று மக்கள் சபையில் கூறினார்.

வருமான வரி கட்டாதவர்களின் பெயர்களை அரசாங்கம் கெஜட்டில் வெளியிடுமா, தியாகி கமிட்டியின் அறிக்கை அமுல் நடத்தப்படுமா என்று கேட்கப்பட்ட கேள்விக்கே அமைச்சர் மேற்கண்டவாறுபதில் கூறினார்.

வருமான வரி கட்டாது காலம் கடத்துபவர்களின் பெயர்களை அரசாங்கக் கெஜட்டில் பிரசுரிக்க வேண்டுமென்று தியாகிக் கமிட்டியின் அறிக்கை சிபாரிசு செய்துள்ளது.

"இன்றைய வருமான வரி சட்டத்தை மாற்றவேண்டும். அப்பொழுதுதான் வருமான வரி கட்டாதவர்களின் பெயர்களை கெஜட்டில் பிரசுரிக்க முடியும். தியாகி கமிட்டியின் அறிக்கை சில நாட்களுக்கு முன்னர்தான் அரசாங்கத்திற்கு சமர்ப்பிக்கப்பட்டது. அவ்வறிக்கையின் மீது அரசாங்கம் முடிவுகளெடுப்பதற்கு சில காலம் ஆகும்" என்று கூறினார். வருமான வரி சட்டத்தைத் திருத்துவதற்கான நடவடிக்கைகளை அரசு வெகு விரைவில் எடுத்துக் கொள்ளும்.

# இந்தியாவிலுள்ள வெளிநாட்டார் பர்மிட் வாங்கியாக வேண்டும்

## பிரதமர் நேரு அறிவிப்பு

புதுடில்லி, டிச. 3—

இந்தியாவில் தங்கியிருக்கும் எல்லா வெளிநாட்டுப் பிரஜைகளும் வாசஸ்தல பர்மிட்டுகளை வாங்கிக் கொள்ள வேண்டும் என்று இந்திய சர்க்கார் முடிவு செய்துள்ளது. பிரதமர் நேரு இத்தகவலை இன்று பத்திரிகையாளர் கூட்டத்தில் தெரிவித்தார்.

மேற்கு வங்கத்திலுள்ள சீனர்களின் ஜனசங்கியை சர்க்கார் எடுத்துக் கொண்டிருக்கிறது என்று ஒரு சில பத்திரிகைகளில் வெளியான செய்தி உண்மையல்ல, என்றும் நேரு தெரிவித்தார்.

அன்னியர் சட்டப் பதிவு விதிகளின்படி 1943 ஆகஸ்டுக்கு முன்பிருந்து இந்தியாவில் குடியிருக்கும் வெளிநாட்டார் இத்தகைய வாச பர்மிட்டுகள் வாங்கிக் கொள்ளவேண்டிய அவசியமில்லை. கல்கத்தாவில் பதிவு செய்துகொண்டுள்ள சீனர்களின் எண்ணிக்கை சுமார் 11,000. ஆனால் அங்கு குடியிருக்கும் சீனர்களின் தொகை 30,000-க்கும் அதிகமிருக்கும் என்று கூறப்படுகிறது என்றும் நேரு கூறினார்.

காமன்வெல்த் நாடுகளின் பிரஜைகள் இத்தகைய பர்மிட் வாங்கவேண்டிய அவசியமில்லை என்று வெளிநாட்டு இலாகா காரியதரிசி திரு. எஸ். தத் கூறினார்.

# பாராளுமன்றத்தில் வெளியிடுமுன் அமைச்சர்கள் எதையும் வெளியில் கூறலாமா?

## மக்கள் சபையில் ஒத்திவைப்பு பிரேரணை

புதுடில்லி, டிச. 5—

"பாராளு மன்றம் நடைபெற்றுக்கொண்டிருக்கும் பொழுது, அமைச்சர்கள் ஒரு செய்தியை பாராளுமன்ற உறுப்பினர்களுக்குத் தெரிவிப்பதற்கு முன்னால் பாராளுமன்றத்திற்கு வெளியே கூறலாமா?" என்று நேற்று ஹேம்பருவா உட்பட சில உறுப்பினர்கள மக்கள் சபையில் ஒரு ஒத்திவைப்புப் பிரேரணை கொண்டு வந்தார்கள்.

அங்ஙனம் அமைச்சர்கள் பாராளுமன்றத்திற்கு வெளியே முதலில ஒரு செய்தியை வெளியிடுவது சபையின் மதிப்பைக் குறைக்கிறதல்லவா, உரிமையை மீறுகிற செயலல்லவா என்று அவர்கள் பிரேரணையில் கூறினார்கள்.

இரண்டு நாட்களுக்கு முன்னர் பத்திரிகை நிருபர்கள் கூட்டத்தில் பிரதமர் நேரு ஒரு செய்தியை வெளியிட்டார், லடாக் சம்பவத்தில் பிடிக்கப்பட்ட இந்திய சிப்பாய்களை சீன ராணுவத்தினர் தகுந்த முறையில் நடத்தவில்லை யென்று இந்திய அரசு எதிர்ப்புத் தெரிவித்ததற்கு, சீன அரசாங்கம் நன்றாகவே நடத்தியதாக பதிலளித்துள்ளது. இந்தச் செய்தியை நேரு ஒரு நிருபரின் கேள்விக்குப் பதிலளிக்கையில் கூறினார். சீன அரசு இந்திய சிப்பாய்களை நன்றாகவே நடத்தியிருக்கிறதென்ற செய்தியை நேரு வெளியிட்டது பற்றியே ஒத்திவைப்புப் பிரேரணை கொண்டுவரப்பட்டது.

நேரு ஒத்திவைப்புப் பிரேரணையின் மீது பேசுகையில் "இந்த விஷயம் மிக அவசரமானதோ அல்லது முக்கியமானதோ அல்ல" என்று கூறினார்.

அவர் மேலும் கூறுகையில் 'அந்த விஷயம நாட்டில் எதிர்ப்பு தெரிவிக்கக்கூடியது அல்ல' என்றார்.

பாராளுமன்றம் நடைபெறும் பொழுது முக்கியமில்லாத ஒரு விஷயத்தை பாராளுமன்றத்திற்கு வெளியே கூறுவது உரிமை மீறுவது ஆகாது அல்லது சபையின் மதிப்பிற்கு குந்தகம் விளைவித்ததாகாது என்று சபாநாயகர் கூறி பிரேரணையை தள்ளுபடி செய்தார்.

# பரஸ்பரம் விட்டுக் கொடுத்து தீர்வு காண்பது சாத்தியமே

## எல்லைத் தகராறுகள் பற்றி மேனன்

புதுடில்லி, டிச. 4—

எல்லைத் தகராறுகளில் பரஸ்பரம் விட்டுக்கொடுத்து உடன்பாடு காணும் முறையை இந்தியா கைவிட்டுவிடவில்லை; ஆனால் இது பிரதேசங்களைக் கைவிட்டுவிட்டதின் பின்னால் 'ஏற்படுவதாக இருக்கக்கூடாது என்று இந்தியப் பாதுகாப்பு அமைச்சர் வி. கே. கிருஷ்ணமேனன் கூறினார்.

சீனாவுடன் இந்தியாவின் எல்லைத் தகராறைப் பெயரிட்டுக் குறிப்பிடாமல், மேனன் பேசுகையில், எல்லைப் பிரச்சினைகளில் தீர்வு காண்பதற்கு இரண்டு வழிகள் உள்ளன; ஒன்று படையெடுப்பு மூலம் பிரதேசத்தைக் கைப்பற்றிக் கொள்வது; மற்றொன்று பேச்சுவார்த்தை மூலம் தீர்வு காண்பது என்றார்.

இந்தியா சமாதானபூர்வமான சகவாழ்வில் நம்பிக்கை கொண்டுள்ளது. பேச்சுவார்த்தைகளை விரும்புகிறது. ஆனால் அந்நிகழ் [illegible] என்று வி. கே. மேனன் கூறினார்.

சில இளைஞர் ஸ்தாபனங்களின் சார்பிலும், பார்லிமெண்ட் உறுப்பினர்களின் சார்பிலும் [illegible] மேனன், மேலே கண்டவாறு கூறினார்.

"சமாதானத்தை ஏற்படுத்தப் பாடுபடும் கிருஷ்ணமேனன் அவர்களே, வருக, உங்கள் வரவு நல்வரவாகுக" என்று மேற்படி வரவேற்பு நடைபெற்ற மண்டபத்தின் வாயிலில் ஒரு பதாகை கட்டப்பட்டிருந்தது.

மேனனுக்கு எதிராக ஒரு பகுதியினர் குற்ற விமர்சனம் செய்வதற்குப் பதிலாகத்தான் இந்த வரவேற்பு ஏற்பாடு செய்யப்பட்டது என்று வரவேற்புக் கமிட்டியின் ஒரு பிரமுகர் கூறினார்.

### பர்மா அரிசி இறக்குமதிக்கு முயற்சி

புதுடில்லி, டிச. 3—

தற்போதுள்ள உடன்பாடு காலாவதியானதும் இந்திய பண்டங்களை ஏற்றுமதிசெய்து பதிலுக்குப் பர்மா அரிசி கொள்முதல் செய்ய ஒரு புதிய ஐந்தாண்டு ஒப்பந்தம் செய்துகொள்ள இந்திய சர்க்கார் முயலுமென்று மக்களவையில் அறிவிக்கப்பட்டது.

# ஐஸன்ஹோவர் விஜயம்

[பி. ஸி. ஜோஷி]

அமெரிக்க ஜனாதிபதி ஐஸன்ஹோவர் இந்த வாரத்தில் நம்முடைய நாட்டுக்கு விஜயம் செய்கிறார். நம்முடைய பண்டையப் புகழ் மிக்க நாட்டுக்கு வருகை தரும் முதல் அமெரிக்க ஜனாதிபதி இவர்தான். இதுவரையிலும் ஆசிய ராஜதந்திரிகள் வாஷிங்டனுக்குப் போய்வந்தது ஒரு வழிப்பாதையாக மட்டுமே இருந்து வந்தது. நீண்ட காலத்திற்குப் பிறகு அமெரிக்க ஜனாதிபதி நம்முடைய அழைப்பை ஏற்றுக்கொள்வதற்கு முன் வந்தது இந்தியாவின் இன்றைய உலக அந்தஸ்திற்கும் உலக சமாதானத்திற்காக இந்தியா உறுதியுடன் பாடுபட்டு வருவதற்கும் கொடுத்துள்ள நற்சாட்சியேயாகும்.

இந்திய மக்கள் விருந்தோம்பும் பண்புடையவர்கள். நம்முடைய விருந்தாளிகளை மனப்பூர்வமாக வரவேற்று, அவர்களுக்கு உயரிய மரியாதை காட்டுவது நம்முடைய தேசியப் பண்பாடாக இருந்துவந்துள்ளது.

நம்முடையதேசிய இயக்கமும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்கெதிராகவும், நம் நாட்டில் ஒரு முற்போக்கான ஜனநாயகத்தை ஏற்படுத்துவதற்காகவும் நாம் நடத்திய போராட்டமும் வாஷிங்டன், ஜெபர்ஸன் ஆகிய அமெரிக்கக் குடியரசுத் தலைவர்களின் உதாரணத்திலிருந்து மகத்தான உத்வேகத்தைப் பெற்றுள்ளது, அத்தகையவர்களைத் தோற்றுவித்த அமெரிக்க மக்களிடம் நாம் மதிப்புவைத்து வந்துள்ளோம். அமெரிக்க மக்களின் இன்றையத் தலைவர் இந்திய மண்ணில், அமெரிக்க மக்களின் சாதனைகளையும் நம்முடைய உலகம் மக்கள் நன்கு வாழ்வதற்கு மகிழ்ச்சி பொங்கும் உலகமாகவும், மேம்பட்ட உலகமாகவும் ஆக்கப்படுவதற்கு அவர்கள் செய்துள்ள மகத்தான உதவிகளையும் இந்தியா பாராட்டுவதை நிச்சயமாக உணருவார்.

### யுத்த வெறிக் கொள்கைகளுக்கு எதிர்ப்பு

அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளின் யுத்தவெறிக் கொள்கைகளுக்கும், அடிமைப்படுத்தும் கொள்கைகளுக்கும் எதிராக சமாதானம் விரும்பும் இந்திய மக்கள் ஏகமனதாகவும், தங்கு தடையின்றியும் தங்களுடைய கவலையையும், எதிர்ப்பையும் தெரிவித்துள்ளனர்.

### மனப்பூர்வமான முயற்சி

ஜனாதிபதி ஐஸன்ஹோவர் நிதானம் வாய்ந்தவர் என்றும், சர்வதேசக் குழறலைத் தணிப்பதற்காகவும், உலக சமாதானத்தை உறுதிப்படுத்துவதற்காகவும் புதிய வழி முறைகளை மனப்பூர்வமாகத் தேடிக் கொண்டிருக்கும் அமெரிக்காவின் தலைசிறந்த ராஜதந்திரி என்ற பெருமையை நியாயமாகவே பெற்றுள்ளார். க்ருஷ்சேவுடன் அவர் வெளியிட்ட கூட்டறிக்கை உலக முழுவதிலும் நம்முடைய நாட்டிலும் அவரது செல்வாக்கை உயர்த்தியுள்ளது. நம்முடைய சர்க்கார் அதை வரவேற்று, தங்களுடைய ஒத்துழைப்பையும் உறுதி கூறியுள்ளனர்.

### விழிப்புடன் இருக்க வேண்டியதின் அவசியம்

மேற்கில் கெடுபிடி யுத்த நிலைமை தணிந்துவரும் காரணத்தினாலேயே, ஏகாதிபத்திய வட்டாரங்கள் அதை மீண்டும் கீழ்த்திசையில் கிளப்புவதற்கு முயற்சிகள் செய்துகொண்டு வருகின்றனர். இந்தியாவின் சுதந்திரமான வெளிநாட்டுக் கொள்கையைக் கண்டு அவர்கள் கடந்த காலத்தில் முகஞ்சுளித்தது போலவே, அவர்கள் தற்பொழுது இந்தியாவின் இன்றையக் கஷ்டங்களைத் தங்களுக்கு சாதகமாக்கிக் கொள்ளுவதற்கு முயலுகின்றனர். தற்பொழுது அமெரிக்கக் குடியரசுத் தலைவரின் இந்தியவிஜயத்தையும் அமெரிக்க ஏகாதிபத்திய வட்டாரங்கள்எந்த முறையில் பார்க்கின்றன என்பதையும், அதை எப்படி அவர்கள் பயன்படுத்திக்கொள்ள முயலுகின்றனர் என்பதையும் கற்றுணர்வதும் குறித்துக்கொள்வதும் மிகவும் பயன்தரத்தக்கதாகயிருக்கும்.

ஜனாதிபதி இந்தியாவிற்கு விஜயம் செய்யப்போகிறார் என்ற தகவல் அறிவிக்கப்பட்டவுடனேயே நியூயார்க் டைம்ஸ் பத்திரிகை, நவ. 6-ந்தேதிய இதழின் தலையங்கத்தில், இந்த விஜயத்திற்கெனத் 'தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கும் காலம்' 'மிகவும்பொறுத்தமான'தென்றும், 'அநேகமாக இது ஒளிவு மறைவில்லாமல்' தென்படுகிறது என்றும், எழுதியிருந்தது. ஐ. நா தலைமைக் காரியாலயத்திலிருந்து ப்ரிபிரஸ் ஜெர்னலுக்கு வில்லியம் ஆர். ப்ரயர் என்ற நிருபர், "ஐக் விஜயத்தின் பின் மறைந்துள்ள பொருள்" என்ற தலைப்பின் கீழ் எழுதியனுப்பிய செய்தியில் "கிழக்கு - மேற்கு ஆதிக்கப் போராட்டத்தில் ஒரு நெருக்கடியான சந்தர்ப்பத்தில் இந்த விஜயம் வருகிறது. அந்தப் போராட்டத்தின் ஒரு மிகவும் நுட்பமான பகுதியை அவரது விஜயம் தொடுகிறது" என்று எழுதியிருந்தார்.

### கெடுபிடி யுத்த வெகுமதிகள்

"ஐரோப்பாவில் கெடுபிடி யுத்தத்தின் பிரதான வெகுமதியாக ஜெர்மனி திகழ்கிறது; தூர கிழக்கில் இதன் திறவுகோலாக ஜப்பான் இருக்கிறது. இதுபோல மத்திய, தெற்கு ஆசியாவில் இந்தியா இருக்கிறது. ஆதிக்க அரசியல் போராட்டங்களில் முன்னிரு நாடுகளைவிட இந்தியாவே சிறந்த வெகுமதி எனச் சிலர் மதிப்பிடுகின்றனர்.

"செஞ்சீனத்தின் அசாதாரண நடத்தையின் காரணமாக, முதன் முறையாக, சென்ற ஏழாண்டுகளில், இந்த வெகுமதி இப்பொழுது மேலை வல்லரசுகளின் பிடிக்குள் இருக்கிறது. உண்மையில், தனது தேசிய கௌரவத்தை நிலைநாட்டுவதற்காக மேற்கு நாடுகளின் கோஷ்டியில் சேர நிர்ப்பந்திக்கப்படும்."

### பிற்போக்காளர் கனவு

இது போன்ற கருத்துக்களை 'நியூயார்க் ஹெரால்ட் டிரிபியூன்' தனது நவ 6-ஆம் நாளைய இதழ் தலையங்கத்தில் வெளியிட்டுள்ளது. "இந்த சுற்றுப் பயணம் இந்த நாட்டுக்கும் இதன் நண்பர் நாடுகளுக்கும் பெரும் லாபத்தைத் தேடித் தரவேண்டும்" என அது முடித்திருக்கிறது.

அமெரிக்க ஜனாதிபதியின் பயணம் சமாதான யாத்திரையாக வேண்டுமென்பதல்ல அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகளின் விருப்பம். ஆனால் கெடுபிடி யுத்தத்துக்கான புதிய தள்ளுதுக்கான வேட்டையாக விருக்க வேண்டுமென்பதே அவர்கள் ஆசை.

லண்டன் டெய்லி மெயில் (நவ. 13) மிகத் தெளிவாக எழுதியுள்ளது. "இந்தியா ஒரு நெருக்கடியான பிரச்சினையாக மாறிவருகிறது. அதன் வடமேற்கு எல்லையில் சீனத்தின் ஆக்கிரமிப்பு நடவடிக்கைகள், ஆண்டுக் கணக்கில் நடைபெறவிருக்கும் போராட்டத்தின் ஆரம்பமே. இப்போராட்டம் பெரும் நிலப்பரப்பின் கதியைத் தீர்மானிப்பதாயிருக்கும். இது ஐசனோவருக்கு மிக நன்றாகத் தெரியும். இப்போராட்டம் அம்பலத்துக்கு வருமானால் இந்தியா மேற்கத்திய நாடுகளின் பக்கம் வந்துவிடும்; இதில் அமெரிக்காவுக்கு ஓரளவு பிடிப்பிருக்கும் என்பதும் அவருக்குத் தெரியும். இந்த விஜயத்தையொட்டி ராணுவ ஒப்பந்தங்கள் தொடருமெனக் கூறவில்லை; ஆனால் இந்த விஜயமே ஒரு விதத்தில் ஒப்பந்தத் தன்மையுடையது என்றுதான் கூறப்படவேண்டும்' இது நம்முடைய காம்பீர்யமிக்க, பெருமிதமிக்க சுயேச்சையான கோஷ்டி சேரா நிலையிலிருந்து இடம் பெயரச் செய்ய நடைபெறும் அசுரத்தனமான சாகஸம்!

### இந்திய-சீனத் தகராறு சந்தர்ப்பம்

சீனத்துடன் இந்தியாவுக்குள்ள தகராறுகளைத்தான் ஏகாதிபத்திய வட்டாரங்கள் பயன்படுத்திக்கொள்ள முயற்சிக்கின்றன, இதை அவர்கள் ஒளிக்காது கூறிவிட்டனர். அவர்கள் நமது நண்பர்கள் போன்று காட்டிக் கொள்ள விரும்புகின்றனர். அதன்மூலம் சமாதானபூர்வமான தீர்வுகாணும் கொள்கையைக் கைவிடச் செய்ய முயற்சி செய்கின்றனர்.

வாஷிங்டன் டெய்லி நியூஸ் (நவ. 5) தனது தலையங்கத்தில் பின்வருமாறு எழுதுகிறது: "இந்தப் பயணத்தின் குறைந்தபட்ச லாபம், இன்னும் கம்யூனிஸ்டு வலைக்கு வெளியிலிருக்கும் லட்சக்கணக்கான ஆசிய மக்களின் சதி குறித்து அமெரிக்கா அலட்சியமாக இருக்கவில்லை என்பதைச் செஞ்சீனத்துக்கு அறிவிப்பதாக இருக்கும்."

நியூயார்க் டைம்ஸ் (நவ. 6) தனது தலையங்கத்தில் "இந்தியாவில் அமெரிக்க ஜனாதிபதி பிரசன்னமாயிருப்பதே பெய்பிங்கில் (பீகிங்) ஒரு நிதான விளைவினை யேற்படுத்தும். அவர் மனம் நிறைந்த வரவேற்பளிக்கப்படுவார் என நேரு அறிவித்துள்ளார். இந்தியா, நண்பர்களின்றி தனியாக இருக்கவில்லை எனத் தெளிவாக வுணர்த்த அமெரிக்கா விரும்புகிறது. இந்த நண்பர்களில் பெய்பிங் அடிக்கடி தனது முதல் விரோதி என அழைக்கும் அமெரிக்காவும் ஒன்று" என எழுதுகிறது.

"இந்தியாவின் பக்கம் அமெரிக்கா இருக்கிறது என்பதைக் குறிப்பதே அமெரிக்க ஜனாதிபதியின் இந்திய விஜயம்" எனக் கூறப்படும் என்று லண்டன் மெயில் (நவ. 13) எழுதியுள்ளது. "இந்த எண்ணமே நேருவுக்குப் பெரும் ஆறுதலாக இருக்கும். அவருடைய நடுநிலைமைக் கொள்கை சீனத்தின் முன் அவரைத் தனிமைப்படுத்திவிட்டது."

இந்த நாட்டிலுள்ள ஏகாதிபத்திய ஆதரவாளர்களின் கீச்சுக் குரல் வலதுசாரி பத்திரிகைகளின் மூலமாக ஒலிக்கின்றது. கோயங்காவின் "இந்தியன் எக்ஸ்பிரஸ்" (நவ. 6) 'திரும்பு முனை' என்ற தலைப்பில் எழுதியுள்ள தலையங்கத்தில் "எல்லைத் தகராறு அதிகமாகி வரும் தருணத்தில் நிகழும் ஐசனோவரின் இந்திய விஜயத்தின் முக்கியத்துவம் பீகிங்கின் கவனத்தைக் கவர்ந்தே தீரும். இந்த விஜயம் உலகின் இரு பெரும் ஜனநாயக நாடுகளுக்கிடையே நெருக்கமான உறவுகளை ஏற்படுத்தும்" எனக் குறிப்பிட்டுள்ளது.

டைம்ஸ் ஆப் இந்தியா (நவ. 7) "ஐசனோவர்" என்ற தலைப்பிட்டு எழுதிய தலையங்கத்தில் பின்வருமாறு கூறியது: "இந்தத் தருணத்தில் குறிப்பிடத்தக்க அம்சம், சீனம் குறித்து இந்தியா செய்த பழந் தவறுகளைப் பொருட்படுத்தாத அமெரிக்காவின் மேலான விவேகம் நிறைந்த கொள்கை. நமது பழந் தவறுகள் மீது குறைகூற மற்றவர்களுக்கு அவசியமில்லாது நம்மை நாமே போதிய அளவில் கண்டித்துக்கொண்டிருக்கிறோம். இந்தப் பின்னணியில் ஐசனோவரின் வருகை இரு மடங்கில் வரவேற்கத்தக்கது."

இக்கூற்றுகள் குறித்து விமர்சனம் வேண்டாம். பத்திரிகைகளின் கருத்துக்களை மேற்கோள் காட்டியது போதும். மேற்காட்டப்பட்டவையே வெளிநாட்டு ஏகாதிபத்தியவாதிகள், உள்நாட்டு பிற்போக்காளர்கள் ஆகியோரின் தலைமையைத் தெளிவாகப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

சீனத் தகராறை தங்கள் நலனுக்கு சாதகமாய்ப் பயன்படுத்தவும் இந்தியா—பாகிஸ்தான் ராணுவஒப்பந்தத்தை உருவாக்கி விடலாமென்றும் முயற்சி செய்த முன்னாளைய அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளை குறித்து நமக்குத் தெரிந்ததே. ஆபத்தை விளைவிக்கக்கூடிய இவ்விஷயங்கள் பிரதமர் நேருவினால் நிராகரிக்கப்பட்டன. 'நியூயார்க் டைம்ஸ்'ன் (நவ. 12) வாஷிங்டன் நிருபர் பழைய முயற்சிக்கு புதிய மெருகிட விரும்புகிறார். "அமெரிக்கா தனது நன்முயற்சியை இவ்விஷயத்தில் (அதாவது ராணுவம் சம்பந்தப்பட்டது) ஈடுபடுத்துமென்று இந்தியா எதிர்பார்க்கிறது. பாகிஸ்தானின் பிரதம கூட்டாளி என்பதோடு ராணுவ தளவாடங்களையும் அதிகமாக கொடுத்துதவிய அமெரிக்காவிடம் பாதுகாப்பு கோரலாம். எல்லை விஷயத்தில் சீனாவோடு ஏற்பட்டுள்ள கடுமையான பிரச்சினையை பாகிஸ்தான் இதுதான் சமயமென்று கருதி நடவடிக்கைகளில் இறங்காமலிருக்க அமெரிக்காவிடம் ஏதாவது ஒருவிதமான உறுதிமொழி கேட்கலாம். இந்திய ராணுவங்களை திருத்தி அமைப்பதற்கும் தேவையான உதவியை கோரலாமென்றும் இங்குள்ள வட்டாரங்கள் நம்புகின்றன."

மேற்கூறிய ஆலோசனையை மேலும் தெளிவுபடுத்தும் ரீதியில் ஸ்டாக்ஹோமிலிருந்து வெளிவரும் டாஜென்ஸ் நிகிடர் (நவ. 14) நேரு-சூ என்-லாய் கடிதப் போக்குவரத்தைக் குறித்து கீழ்வருமாறுகூறுகிறது. "ராணுவ பலஹீனம் என்கிற பின்னணியிலிருந்துதான் அவ்வாலோசனையைப் பார்க்கவேண்டும். காஷ்மீரிலிருந்து இந்தியா தனது படைகளை பின்வாங்க நேரிடும் சமயத்தில் பாகிஸ்தான் சந்தர்ப்பத்தைப் பயன்கொள்ளாமல் இருக்கும்படி ஐசன்ஹோவரிடம் நேரு கேட்கலாம்."

### நேருவின் பலஹீனம்

நேருவின் ஏகாதிபத்தியஎதிர்ப்புக் கொள்கையிலுள்ள பலஹீனத்தை இச்சந்தர்ப்பம் தெளிவாகக் காட்டுகிறது. இந்தியச் சுதந்திரத்திற்கு ஆபத்து விளைவிக்காதென்று நினைத்துக்கொண்டிருந்தவர் 'ஏகாதிபத்தியத்தின்' மீது நிழற் சண்டை போட்டார். ஆசியா மீதுள்ள ஒரே ஏகாதிபத்திய அபாயத்தை குறித்துஅவரை "கண்மூடித்தனமாக இருக்கச் செய்துவிட்டது." மேற்கூறிய ஏகாதிபத்திய ஆலோசனையை மீண்டுமொருமுறை நமது நாட்டின் குற்றேவல் பத்திரிகைகளும் எஜமான விசுவாசத்துடன் பிரதிபலித்தன. சான்றாக டிரிப்யூன் (நவ. 6) தலையங்கத்தில் எழுதியதாவது:

பாகிஸ்தானோடு ஒருவித ஒப்பந்தத்திற்கு வருவதின்மூலம் மேற்கு, கிழக்கு பகுதிகளின் பாதுகாப்பிற்கு இந்தியா உத்திரவாத மேற்பட செய்யுமானால் சீன பயமுறுத்தலை அதிக வன்மையோடும், ஆழ்ந்த கருத்தோடும் இந்தியா கவனித்து கொள்ள முடியும். இவ்வழியில்தான் முயற்சி தொடரவேண்டுமென்று கேட்டுக் கொள்ளப்படுகிறது. சீனாவோடுள்ள பிரச்சினையை தீர்ப்பதற்கு நாம் ஈடுபட்டுள்ள போது மேற்கு எல்லையிலுள்ள அண்டைநாடு தகராறை கிளப்பாது என்கிற உடன்பாடான [illegible] இவ்விஷயங்களில் [illegible] அடங்கியுள்ளது. பாகிஸ்தானுடன் உடன்பாடு சாத்தியமில்லை என்று கருதினால், அமெரிக்கா மூலம் தேவைப்படும் உத்திரவாதம் பெற பேச்சுவார்த்தை நடத்த சாத்திய கூறுகள் உள்ளன. இவ்விஷயங்கள் குறித்து அதிகார பூர்வமற்ற உத்திரவாதங்கள் ஏற்கனவே இந்தியாவுக்கு கொடுக்கப்பட்டுள்ளன.

தங்கள் ஜனாதிபதியின் விஜயத்தினால் அமெரிக்க ஏகாதிபத்திய அணிகள் எதை எதிர்பார்க்கின்றனர் என்பதை மேற்கூறிய கருத்துக்கள்-சுருக்கமாக இருந்த போதிலும்-தெளிவாக கூறுகின்றன. இந்திய பிற்போக்கு அணிகள் வெட்கமின்றி, தேசிய கௌரவத்தை உதறித்தள்ளிவிட்டு, இந்திய பொதுமக்களின் கருத்தை எவ்வளவு எளிதில் புறக்கணிக்கப் பார்க்கின்றனர் என்பதையும் காட்டுகின்றன. ஆனால் உலக அரங்கில் அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் உத்தரவுகள் வெற்றிகரமாக செயலாற்றிய காலம் மலையேறிவிட்டது. அவர்களது பரிதாபகரமான நிலையைத்தான் மேற்கூறிய கருத்துக்கள் தெளிவாக்குகின்றன, தேசபக்த பரம்பரையில் வந்த, சமாதானம் விரும்பும் இந்திய பெருமக்கள், ஏகாதிபத்திய ஆதரவாளர்களின் பிற்போக்கு விஷக் கருத்துக்களையும், செய்திகளையும் ஏற்றுக்கொண்ட காலம் இனி வரவே செய்யாது.

### சரியான பாதை

அமெரிக்காவின் தலைவரை வரவேற்கும்போது இந்திய மக்களும் அரசாங்கமும் இந்தியாவின் உண்மையான உணர்ச்சியை வெளிப்படுத்தும் சந்தர்ப்பத்தை பெறுவர்.

தங்களின் உண்மையான இருதயப் பூர்வமான எண்ணத்தை அமெரிக்க மக்களுக்குத் தெரிவிக்க பொதுமக்கள் ஒரு சந்தர்ப்பத்தைப் பெறுவர். சமாதான சகவாழ்வுக்காகவும், இணைந்து வாழ்வதினால் வாழ்க்கையில் நாம் காணும் பயனையும் வற்புறுத்த பொதுமக்கள் சரியான சந்தர்ப்பம் கிடைத்ததென்று நம்புவர். நாம் நட்புரிமை கொண்ட மக்கள்; நமது நாடு சுய-கௌரவம் படைத்தது. பொது லட்சியமாகிய உலக சமாதானத்திற்காக இணைந்து செயலாற்ற என்றும் நாம் தயார்; இந்த லட்சியத்தை தவறான வழியில் செலுத்தவோ மாற்றவோ விடாமல் கண்ணும் கருத்துமாக காப்பாற்றுவோம் என்பதை நேரில் கூறும் சந்தர்ப்பத்தை ஜனாதிபதி ஐசன்ஹோவர் பெறுவார்.

உலக சமாதானத்தின் சிறந்த பாரம்பரியமும், சிறந்த குறிக்கோளும், உள்ள பயனும் நமது பிரதம மந்திரி, ஜனாதிபதி ஐசன்ஹோவரோடு பேச்சுவார்த்தை நடத்த உதவிபுரியட்டும்; விவாதத்தின் பயன் இரு நாடுகளுக்கும் பெருமையும் புகழும் தேடித் தரட்டும். சரித்திர பூர்வமான இச்சந்திப்பில் இவைகளைத்தான் எதிர்பார்க்கிறோம். இந்திய கம்யூனிஸ்ட் கட்சி இதற்காக வேண்டிக் கொள்ளுகிறது. இவைகளைத்தான் இரு நாடுகளின் பொது மக்களும், சமாதானம் விரும்பும் மனித சமுதாயமும் ஆவலோடு எதிர்பார்க்கிறது, விரும்புகிறது.

# ஐசன்ஹோவருக்கு இதாலியக் கம்யூனிஸ்டுகள் வரவேற்பு

## கெடுபிடி யுத்தம் தணிவதற்கு உதவுமென நம்பிக்கை

ரோம், டிச. 4—

தன்னுடைய 14 நாட்டு விஜயத்தின் ஆரம்பமாக, முதல் முதலில் இதாலிக்கு விஜயம் செய்த அமெரிக்க ஜனாதிபதி ஐசன்ஹோவருக்கு இதாலியக் கம்யூனிஸ்டுக் கட்சி இன்று பெரிய வரவேற்பளித்தது.

நகரத்தின் 2,50,000 தொழிலாளிகளுக்கும் பிரதிநிதித்துவம் வகிக்கும் இதாலியக்கம்யூனிஸ்டுக் கட்சியின் ரோமாபுரிக் கிளை, நகரெங்கும் ஐசன்ஹோவருக்கு வரவேற்பளிக்கும் சுவரொட்டிகளை ஒட்டியிருந்தது.

### போர்காலத் தோழமை

கடந்த யுத்த காலத்தில் அமெரிக்க-சோவியத் துருப்புகளுடன் இதாலிய கொரில்லாப் படையினரும் தோளோடு தோள் சேர்ந்து விரோதியை எதிர்த்துப் போராடியது அந்த சுவரொட்டி நினைவுக்குக் கொண்டுவரப்பட்டிருந்தது.

ரோமாபுரிக்கு ஐசன்ஹோவரின் 3 நாள் விஜயம், குழறல் யுத்தத்தை ஒரு முடிவுக்குக் கொண்டு வருவதற்கும் நாடுகளிடையே சமாதான சகவாழ்வு முறை நிலவுவதற்கான சூழ்நிலை ஏற்படுவதற்கும் உதவும் என்று இதாலியக் கம்யூனிஸ்டுகள் நம்புவதாக, சுவரொட்டிகளில் குறிப்பிடப்பட்டிருந்தது.

# பட்டத்தின் பதவிக்கு ஆபத்து!

திருவனந்தபுரம், டிச. 4—

கேரளப் பிரதேச காங்கிரஸ் கமிட்டியின் தலைவர் ஆர். சங்கர் தேர்தலில் போட்டியிடுவதால் முதலமைச்சர் பதவி தமது சொந்தக் குத்தகை என்று மனப்பால் குடித்திருந்த பட்டம்தாணுப் பிள்ளைக்கு ஆபத்தாக வந்து முடிந்திருக்கிறது.

மன்னத்தின் உதவியுடன் முன்னாள் காங்கிரஸ்மந்திரியான பனம்பள்ளி போன்றோர் போட்டியிடாமல் தவிர்ப்பதில் பட்டம் வெற்றிபெற்றார். ஆனால் 83 காங்கிரஸ் அபேட்சகர்கள் தேர்தலில் நிறுத்தப்பட்டு தனிக்கட்சி மெஜாரிட்டி பெறப் பகிரதப் பிரயத்தனம் நடக்கிறது. காங்கிரஸ் வந்தால் ஆர். சங்கர் முதலமைச்சராக்கப்படுவது யானை வரும் பின்னே மணியோசை வரும் முன்னே என்ற அளவுக்கு நிச்சயம். எனவே பட்டம் பதற்றமடைந்திருப்பதாகக் கூறப்படுகிறது. நகர அரசியல் வட்டாரங்களில் இந்த விஷயம் பரவலாகப் பேசப்பட்டு வருகிறது.

# வெற்றி கிட்டும்வரை அல்ஜீரியா போராடும்

பீகிங், டிச. 3—

கடந்த ஐந்து வருடங்களாக வீர சுதந்திரம் வேண்டி, மரணத்தையும் திரணமாக மதித்து ஆயுதம் தாங்கியப் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள் அல்ஜீரிய மக்கள். அல்ஜீரிய தேசியக் குடியரசின் தாற்காலிக சர்க்கார் (மக்கள் சர்க்கார்) தேச விடுதலைப் போராட்டத்துக்கு தலைமை தாங்கி வருகிறது. இதுவரை 5 லக்ஷம் அல்ஜீரியமக்கள் போர்க்களத்தில் மாண்டிருக்கிறார்கள்.

இரத்தவெறிபிடித்த பிரெஞ்சு சர்க்கார் இவ்வளவு அல்ஜீரிய மக்களைக் கொன்று குவித்தும்வெற்றி காண முடியவில்லை. வெற்றி இல்லையென்பது மட்டுமல்ல; ஒவ்வொரு நாள் போராட்டத்திலும் படுசேதமும், படுதோல்விகளுமே அடைந்து வருகிறார்கள். பிரெஞ்சுப் பொக்கிஷம் காலியாகி டிகாலே சர்க்கார் மேற்கு ஜெர்மனியிடம் கடன் வாங்கும் அளவுக்கு திவாலாகி வருகிறது.

சமாளிக்கப் போவதாக மார்தட்டி சர்வாதிகாரியாக வந்த டிகாலே சர்க்கார் திணறுகிறது. யுத்த நிறுத்தம் பற்றி பேசுகிறது. ஆனால் அல்ஜீரியாவின் சுயநிர்ணய உரிமையை ஏற்றுக் கொண்டால்தான் சமரசம் பேச முடியுமென்றும், வெற்றி கிட்டும்வரை போராடுவதற்கு எவ்வளவு சக்தி தேவையோ அவ்வளவு சக்தி தங்களிடம் இருப்பதாகவும் சுதந்திர சர்க்கார் கூறுகிறது.

அல்ஜீரிய சுதந்திர சர்க்காரின் பிரதமரும் சேனாதிபதிகளும் செஞ்சீனாவுக்கு அடிக்கடி சென்று சீன மக்களின் பேராதரவைப் பெற்று வருகிறார்கள் என்பது தெரிந்ததே.

# முன்னாள் மஞ்சுகோ மன்னர் விடுதலை

## சீன உயர்நீதி மன்றத்தின் முடிவு

பீகிங், டிச. 4—

ஜப்பானின் கைப்பாவையாக யிருந்த முன்னாள் மஞ்சுகோ ராஜ்யத்தின் சக்கரவர்த்தி ஹென்ரிபூயீ என்பவருக்கு மன்னிப்பளித்து விடுதலைசெய்ய நவ சீன உயர்நீதி மன்றம் இன்று தீர்மானித்துள்ளது. 53 வயதான இவர் 14 ஆண்டுகள் காவலில் வைக்கப்பட்டிருந்தார்.

மன்னிப்பளிக்கப்பட்ட 33 யுத்த கைதிகளின் பெயர்களோடு இவரது பெயரும் வெளியிடப்பட்டிருந்தது. இரண்டு மாதங்களுக்கு முன்னால் சீனத்தின் 10வது ஆண்டு விடுதலைதினத்தையொட்டி இவர்களுக்கு மன்னிப்பு அளிக்கப்பட்டது.

(ராய்ட்டர்)

# ஆசிரியருக்குக் கடிதங்கள்

### நூல்விலையும் நெசவுத் தொழிலாளர் அவதியும்

ஐயா,

தமிழ் நாட்டிலுள்ள ஆலை முதலாளிகளின் கொள்ளை லாபப் பேராசையின் விளைவாகவும் சென்னை அரசாங்கத்தின் கூட்டுறவு நூற்பு ஆலையின் கொள்ளை லாபப் பேராசையின் விளைவாகவும், மார்க்கெட் சூதாடிகளின் சூழ்ச்சியின் காரணமாகவும் கடந்த சில மாதங்களாக நூல் விலை உயர்வு நாளுக்குநாள் அதிகரித்துக்கொண்டே இருக்கிறது. ஏற்கனவே நெசவாளர்கள் கூட்டுறவு சங்கங்களுக்கு சர்க்கார் கொடுக்கவேண்டிய 'ரிபேட்' பணம் கொடுக்காததின்விளைவாக நெசவுத் தொழில் க்ஷீணதசை அடைந்திருக்கிறது. இச்சமயத்தில் நூல்விலை உயர்வினால், நெசவுத் தொழிலாளியின் குறைந்த கூலியிலும் நாளுக்குநாள் வெட்டு ஏற்பட்டு, மக்கள் பிழைப்புக்கு வழியின்றி ஊரைவிட்டு வெளியேறிக்கொண்டிருக்கின்றனர்.

திடீர் நூல் விலை உயர்வின் காரணமாக பல்லாயிரக் கணக்கான நெசவுத் தொழிலாளியின் கூலியில் ரகவாரியாக சராசரி மாத வருமானத்தில் 10 ரூபாயிலிருந்து 15 ரூபாய் வரை வெட்டு ஏற்பட்டுள்ளது. விலைவாசி உயர்வினால் பாதிக்கப்படும் மக்களுக்கு நெருக்கடி மேல் நெருக்கடி ஏற்பட்டு மக்கள் அவலநிலைக்கு ஆளாகி வருகின்றனர்.

ஆகவே இந்த (சத்திரப்பட்டி) ஏரியாவில் 10 ஆயிரத்திற்கு அதிகமான நெசவுத்தொழிலாளர்கள் மிகவும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள். எனவே சென்னை சர்க்கார் உடனடியாக நூல் விலையை குறைக்க நடவடிக்கை எடுப்பதுடன் சர்க்கார் கூட்டுறவு நூற்பு ஆலையின் நூல்விலையைகுறைத்து மற்றவர்களுக்கு வழி காட்டுவதுடன் இப்பகுதி நெசவாளர்கள் வாழ்க்கையை பாதுகாக்க சர்க்கார் உடனடியாக முன்வரவேண்டும்.

எஸ். சங்கிலிக்காளை
தமிழ்நாடு தொழிற்சங்கக் காங்கிரஸ் கவுன்சில் மெம்பர்,
சத்திரப்பட்டி.

| நூல் விபரம் | மில் பெயர் | ஆகஸ்டு ரூ. ந.பை. | நவம்பர் ரூ. ந.பை. |
| --- | --- | --- | --- |
| கௌ. 20 | மதுரை மீனாட்சி | 16 69 | 18 75 |
| கௌ. 20 | ராஜபாளையம் சக்கரம் | 16 ... | 18 44 |
| கௌ. 20 | பேட்டை சர்க்கார் கூட்டுறவு நூற்பு ஆலை | | 18 19 |

நெசவுத் தொழிலாளியின் கூலி (விபரம்)

| ஒருஜோடி 1-க்கு | ஆகஸ்டு | நவம்பர் |
| --- | --- | --- |
| 52×4×8 வேஷ்டி [illegible] கூலி | 1 25 | 0 75 |
| 46×4×7½ கலர் கைலி கூலி | 1 00 | 0 62 |

### சட்டம் வந்தும் பலனில்லை!

ஐயா,

கையேர், மாட்டு வாரம்தார் சட்டம் வெளியாகி மாதங்கள் பலவாகி விட்டன. சட்டப்படி கடந்த ஏப்ரல் மாதம் 27-ந் தேதி முசிரி தாசில்தாரிடம் நிலமீட்சி மனு கொடுக்கப்பட்டது நாளது தேதி வரை அந்த மனுக்களின் கதி என்ன என்பதே தெரியவில்லை? கரையான் கதிர் தின்றுவிட்டனவா? அல்லது சட்டத்தை முடமாக்கும் போக்கில் அதிகாரிகள் நடவடிக்கை எடுக்கவில்லையா? அல்லது சர்க்கார் விவசாயிகளைப் பாதுகாக்கும் லட்சணமா? என்பதும் புரியவில்லை

இது சம்பந்தமாக 30-11-59-ந் தேதி திருச்சி ஜில்லா விவசாயத் தொழிலாளர் சங்கத் தலைவர் தோழர் ஜி. ஜி. ராஜன் தலைமையில் ஆமூர் விவசாயிகள் சங்கக் கமிட்டி அங்கத்தினர்கள் முசிரி தாசில்தாரைச் சந்தித்து கேட்டதற்கு, 'ரெண்ட்' கோர்ட்டு தாசில்தாரிடம் மனுக்களை அனுப்பிவிட்டதாகவும், விரைவில் நடவடிக்கை எடுக்கப்படுமென்றும் கூறினார். சோஷலிசம் பேசும் காங்கிரஸ் ஆட்சியில் சட்டம் வந்தும் நிலத்தைச் சாகுபடி செய்ய முடியாமல் விவசாயிகள் வாடுகிறார்கள். இந்த அவல நிலையைப் போக்க சர்க்கார் உடனே நடவடிக்கை எடுக்குமா?

எம். கே. பெரியசாமி
காரியதரிசி விவசாயிகள் சங்கம்,
ஆமூர், முசிரி தாலூகா.

# கோவை மாவட்டச் செய்திகள்

## மேட்டுப்பாளையத்தில் சர்வகட்சி ஊர்வலம், பொதுக்கூட்டம்

கோவை நவ. 30—

விலைவாசி உயர்வை எதிர்த்து சர்வகட்சிகள், பல்வேறு சங்கங்கள் சார்பில் ஊர்வலம், பொதுக் கூட்டம் நவ. 22-ல் இங்கு நடைபெற்றது. அன்னபூர்ணிப் பேட்டை மைதானத்தில் தோழர் கே. பொன்னுமுத்து தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் கோவைத் தோழர் எல். அப்பு விலைவாசி உயர்வு இயக்கம் பற்றி விரிவாகப் பேசினார்.

பிறகு தோழர்கள் உன்னிபாலன், மாரியப்பன், என். வெங்கடாசலம், வெள்ளியங்கிரி, எம். கே. கருப்பண்ணன், ஏ. கந்தசாமி ஆகியோரும் பேசினர்.

### பவானி தாலுகாவில் உணவியக்கக் கூட்டங்கள்

பவானி தாலுகாவில் பல இடங்களில் உணவுப் பொருள்களின் விலைகளைக் குறைக்க வற்புறுத்தி பொதுக் கூட்டங்களும் ஊர்வலங்களும் நடைபெற்றுள்ளன. ஐம்பை, பவானி, கீழ்வாணி, தளவாய்ப்பேட்டை, பெரிய வடமணபாளையம், குருப்பநாயக்கன் பாளையம் ஆகிய இடங்களில் கூட்டங்கள் நடைபெற்றன. 22-11-59-ல் சர்வ கட்சிகளின் சார்பில் கீழ்வாணி, அந்தியூர், தளவாய்ப்பேட்டை, பெரிய மோளபாளையம், ஐம்பை சின்ன மோளபாளையம், சீராபாளையம், சேர்வராயன்பாளையம், காடையம்பட்டி, சலங்கபாளையம், பவானி ஆகிய இடங்களிலிருந்து ஊர்வலங்கள் புறப்பட்டு தாசில்தாரிடம் உணவு விலையைக் குறைக்க வற்புறுத்தும் மனு அளிக்கப்பட்டது.

அன்று மாலை மு. நாகராஜன் தலைமையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் எஸ். எஸ். எம். சுப்பிரமணியம், டி. ஐ. எம். இப்ராஹிம், சுவாமிநாதன், காளியண்ணன், பி. எஸ். ஷண்முகம் ஆகியோர் பேசினர்.

### பாப்பநாயக்கன்பாளையம் கிருஷ்ணா பிரஸ் விவகாரம்

கோவை பாப்பநாயக்கன்பாளையத்திலிருக்கும் கிருஷ்ணா பிரஸ் கதவடைப்பைக் கண்டித்து விஜயகுமார் ஜின்னிங் பேக்டரி தொழிலாளர்கள் ஆர்ப்பாட்ட ஊர்வலமொன்றை நடத்தினர். கிருஷ்ணசாமி (ஜில்லா காட்டன், ஜின்னிங், ஆயில் மில்ஸ் தொழிலாளர் சங்க நிர்வாகக் கமிட்டி உறுப்பினர்) ஊர்வலத்தைத் தலைமை தாங்கி நடத்தினார்.

### பல்லடம்

பல்லடம் நகர கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர்களுக்குக் கார்டு வழங்கும் விழா நவ. 19ல் நடைபெற்றது. தோழர் பி. நாராயணன் உரை நிகழ்த்தினார்.

### தாராபுரம் ஆசிரியர் கூட்டணி

தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூட்டணியின் தாராபுரம் வட்டாரக் கிளையின் பொது உறுப்பினர் கூட்டம் திரு. வி. ராமசுவாமி அய்யர் தலைமையில் நடைபெற்றது. தமிழ்நாடு தொடக்கப்பள்ளி ஆசிரியர் கூட்டணித் தலைவர் திரு. ஆர். ராமையாத்தேவர், அமைப்பாளர் ஒய். வி. அப்பாராவ் ஆகியோர் பேசினர். திரு. ந. சபாபதி, திரு. டி. வடுகநாதன், திருவாட்டி மேரிகிரேஸ் டேவிட் ஆகிய மூவரும் மாநில மாநாட்டிற்குப் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். திரு. ந. சபாபதி நன்றி கூறினார்.

### சத்தியமங்கலம் பீடித் தொழிலாளர்கள் அவதி

சத்தியமங்கலம் சி. கே. ஜே. சேவல் மார்க் பீடி நிர்வாகமும் எஸ். கே. ஏ. அலீம் சன்ஸ் நிர்வாகமும் டிசம்பர் முதல் தேதியிலிருந்து தங்களது பாக்டரிகளை மூடப்போவதாகப் பயமுறுத்தி வருகின்றனர். சேவல் மார்க் நிர்வாகம் சென்ற 3 மாத காலமாகத் தொழிலாளர்களுக்குச் சரியாக வேலை தருவதில்லை. அலீம் சன்ஸ் பீடி கம்பெனி நிர்வாகமும் தொழிலாளரின் கூலியை அடியோடு குறைக்க ஆரம்பித்துள்ளது. இந்த அநீதிகளை எதிர்த்துத் தொழிலாளர் ஒன்றுபட்டு வருகின்றனர். உயர்தர அதிகாரிகளுக்கும் த. நா. தொ. சங்கச் செயலாளருக்கும் வி. கே. கோதண்டராமன் எம். எல். ஏ., சி. என். அண்ணாதுரை எம்.எல்.ஏ., முதலியோர்களுக்கும் தொழிலாளர்கள் விபரங்களை அனுப்பியுள்ளனர்.

### அவிநாசியில் நிதி நாடகம்

அவிநாசி பிர்க்கா கம்யூனிஸ்ட் கட்சி நிதிக்காக நவ. 14ல் கோவை ஸ்புட்னிக் நாடக மன்றத்தினரின் 'ஒன்று பட்[illegible]' [illegible] கம் நடத்தப்பட்டது. கோவை ஜில்லா மில் தொழிலாளர் சங்கத் தலைவர் தோழர் கே. என். சின்னையன் தலைமை வகித்தார்.

சர்வகட்சி உணவு விலை ஏற்றத்தடுப்புக் கமிட்டியின் சார்பில் நவ. 22ல் நடைபெற்ற பொதுக் கூட்டத்துக்குத் திரு. சின்னைய கவுண்டர் தலைமை வகித்தார். க. சர்தார்-தி. மு. க., ஆர் மாணிக்கம், ஐ. எம். ஷரீப்-கம்யூனிஸ்ட், ஆகியோர் பேசினர்.

### சென்னிமலை

நவ. 22ல் சென்னிமலையில் எம். ராமசாமி தலைமையில் நடைபெற்ற உணவியக்கக் கூட்டத்தில் ரா. கிருஷ்ணன், ஈரோடு எஸ். கிருஷ்ணன் பி. ஏ., பி. எல் ஆகியோர் பேசினர்.

### செந்தாம்பாளையம்

சென்னிமலையை அடுத்த செந்தாம்பாளையத்தில் செ. க. பழனிச்சாமி தலைமையில் நடைபெற்ற உணவியக்கக் கூட்டத்தில் ஏ. எஸ். முத்துசாமி, ஏ. பி. கிருஷ்ணசாமி, எம். ராமசாமி ஆகியோர் பேசினர்.

### இச்சிப்பட்டி

இச்சிப்பட்டி உணவியக்கப் பொதுக்கூட்டத்துக்கு இ. எஸ். சின்னத்தம்பி கவுண்டர் தலைமை வகித்தார். ஏ. எஸ். முத்துசாமி, ரா. கிருஷ்ணன், எம். ராமசாமி முதலியோர் பேசினர்.

### மேலப்பாளையம்

மேலப்பாளையத்தில் ரா. கிருஷ்ணன் தலைமையில் நடைபெற்ற உணவியக்கப் பொதுக்கூட்டத்தில் ஏ. எஸ். முத்துச்சாமி, எம். ராமசாமி ஈரோடு கே. ராமலிங்கம் முதலியோர் பேசினர்.

### அவிநாசி

அவிநாசிப் பிர்க்கா கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் முதலிபாளையத்தில் 15-11-59-ல் பொதுக்கூட்டம், கண்டன ஊர்வலம் நடைபெற்றன.

கூட்டத்தில் தோழர் ஐ. எம். ஷரீப் சர்க்காரின் உணவுக் கொள்கையைக் கண்டித்துப் பேசினார்.

### சர்வ கட்சி உணவு போராட்டக் கமிட்டி

அவிநாசி பிர்க்கா கம்யூனிஸ்ட் கட்சி, தி. மு. க., தமிழரசுக் கழகம் ஆகியவற்றின் ஊழியர்கள் கூட்டம் 17-11-59-ல் நடைபெற்றது.

விலைவாசி உயர்வு-எதிர்ப்பு இயக்கம் பற்றி தோழர் ஐ. எம். ஷரீப் விளக்கினார். மேலே கூறப்பட்ட மூன்று கட்சிகளையும் சேர்ந்த 9 பேர்களைக் கொண்ட விலை உயர்வு எதிர்ப்பு சர்வ கட்சிக் கமிட்டி அமைக்கப்பட்டது. தோழர்கள் ஐ. எம். ஷரீப் (கம்யூ.), டி. கே. சர்தார் (தி.மு.க.), அ. சி. தண்டபாணி (தமிழரசு) காரியதரிசிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### கணபதிபுத்தூர்

விலைவாசி உயர்வு கண்டனக் கூட்டம் 21-11-59-ல் பிள்ளையார் கோவில் மைதானத்தில் தோழர் எஸ். கருப்புசாமி தலைமையில் நடைபெற்றது. தோழர்கள் எஸ். கிருஷ்ணன் (கம்யூ), இ.ரா. இளம்வழுதி ஆகியோர் பேசினர்.

### குருப்பநாயக்கன் பாளையம்

சர்வ கட்சி உணவு விலைவாசிக் குறைப்புக் கிளர்ச்சிக் கூட்டம் ஊராட்சி மன்றத் திடலில் 21-11-59-ல் தோழர் என். கந்தசாமி தலைமையில் நடைபெற்றது.

தோழர்கள் மு. சுப்ரமண்யம் (தி.மு.க.), இராமு (கம்யூ), வெங்கிடாசலம் (கம்யூ) ஆகியோர் பேசியபின் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. கூட்டத்திற்கு முன் ஊர்வலமும் நடைபெற்றது.

# சம்பள கமிஷன் சிபாரிசும் அரசாங்க அறிவிப்பும் ஏமாற்றம் தருகின்றன

## ஊழியருக்கு நியாயத்தை மறுக்கும் போக்குக் கண்டிக்கத்தக்கது

### கே. அனந்தன் நம்பியார் அறிக்கை

சென்னை, டிச. 5—

மத்திய சம்பள கமிஷன் சிபாரிசுகள் குறித்து தென் பிராந்திய ரயில்வே லேபர் யூனியன் துணைத் தலைவர் தோழர் கே. அனந்தன் நம்பியார் பின்வரும் அறிக்கையைவிடுத்துள்ளார்:



"யூனியன் அரசாங்கக் குறிப்புடன் வெளியிடப்பட்டுள்ள மத்திய சம்பள கமிஷனின் சிபாரிசுகள் மத்திய அரசாங்க ஊழியர்களுக்குப் பெரும் ஏமாற்றத்தைத் தருவதாய் உள்ளன. இந்த அறிவிப்பு வெளியாகுமுன் குறைந்தபட்சம் ரூ. ஐந்தாவது உயரும் என வதந்திகள் உலவின. இதுவும் சரியல்ல என்பது இப்பொழுது நிரூபிக்கப்பட்டுள்ளது. சம்பளமும் பஞ்சப்படியும் 80க்குக்கீழ் உள்ளவர்களுக்கு மட்டுமே மீதிப் பணம் தரப்படுகிறது. மற்றவர்கள் உத்தேசிக்கப்பட்டுள்ள புதிய விகிதங்கள் நிர்ணயிக்கப்படும்வரை காத்திருக்க வேண்டியுள்ளது. அதுவும் 33வது அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள முறையின் அடிப்படையில் (விலைவாசி) புள்ளி ஏற்றத்துக்கொப்ப நிர்ணயிக்கப்படுகிறதா என்பதை அவர்கள் பொறுத்திருந்து பார்க்கவேண்டும். ஆனால் இப்பொழுது அரசாங்கம் ஏற்றுக்கொண்ட அளவில் ஊழியர்களில் மிகச் சிறு பகுதியினருக்குத் தவிர மற்றவர்களுக்கு எவ்வித லாபமும் இல்லை. அதுவும் பிராவிடென்டு நிதிக்குப் பணம் அளிப்பது போகக் கையில் கிடைக்கும் பணம் மிக மிகச் சொற்பமாக இருக்கும்.

"பஞ்சப்படி குறித்த பகுதியும் மிகவும் பிற்போக்குத்தன்மை வாய்ந்ததாகவே இருக்கிறது. முன்பு நியமிக்கப்பட்ட கமிஷனின் ஆக்கபூர்வமான யோசனைகள் அனைத்தும் திருத்தப்பட்டுள்ளன. ஊழியர்களுக்குப் பஞ்சப்படியில் இப்பொழுது எவ்வித உயர்வும் இல்லை. 1949-ம் வருட மட்டத்தை 100 ஆகக் கொள்ளப்பட்ட வாழ்க்கைச் செலவுப் புள்ளியில் 25 சத வீதம் உயர்வு ஏற்பட்டால்தான் ஏதாவது படி உயர்வை எதிர்பார்க்க முடியும்.

"ஒத்துக்கொள்ளப்பட்ட சிபாரிசில் உள்ள சிறு சலுகை, "சி" பிராந்தியத்தில்ரூ.125 முதல் 150 வரை வருமானமுள்ளவர்களுக்கும் 'பி' பிராந்தியத்தில் ரூ. 200 முதல் 250 வரை வருமானமுள்ளவர்களுக்கும் வீட்டு வாடகை அலவன்ஸ் புதிதாக அளிக்கப்பட்டிருப்பதாகும்.

"பஞ்சப்படியை சம்பளத்துடன் "முழுமையாக"ச் சேர்த்திருப்பது பற்றிப் பிரமாதமாகக் கூறப்படுகிறது. இந்த விஷயத்திலும் இப்பொழுதுள்ள பஞ்சப்படியில் ரூ. 10-ம், ரூ. 20-ம் முறையே ரூ. 150க்குக் குறைவாகப் பெறுபவர்களிடமிருந்தும் ரூ. 150க்கு அதிகமாகப் பெறுவோரிடமிருந்தும் பிரித்தெடுப்பதன் மூலம் இந்த இணைப்பு நடைபெறுகிறது. இதிலுள்ள மீதித் தொகை மட்டுமே சேர்க்கப்படவிருக்கிறது.

"இவை நீங்கலாக கண்டிக்கப்படத்தக்க வேறு சில சிபாரிசுகளும் உள்ளன. இவற்றில் விடுமுறை நாட்கள், காஷுவல் லீவ் குறைப்பு பற்றியவற்றையும் அலுவலகங்களில் வேலை நேரங்களை அதிகப்படுத்துவது பற்றியும் உள்ள சிபாரிசுகளை அரசாங்கம் ஏற்கனவே ஏற்றுக்கொண்டுள்ளது. ரயில்வே ஊழியர்களின் பாஸ், சலுகை டிக்கட் ஆர்டர்கள் வெட்டப்படுவதும் அவர்கள் பல ஆண்டுகளாக அனுபவித்து வந்த சலுகைகளைப் பறிப்பதாகும். இவை பெருமளவில் பாதிப்பனவாகும்.

"இதர சிபாரிசுகளின் பல்வேறு அம்சங்களின் நுணுக்கங்களையும் பரிசீலிக்காமலேயே, சிபாரிசுகள் பலவும் பொதுவாக அரசாங்கத்தின் அறிக்கையும் மத்திய அரசாங்க ஊழியர்களால் ஏற்கத் தக்கவையல்ல, அவை மிகவும் பிற்போக்கானவை தீமை பயப்பவை என்பதைக் கூற வருந்துகிறேன்.

"அவர்களுக்கிருக்கும் ஒரேவழி, ஒன்று சேர்ந்து பலத்த கண்டனம் எழுப்புவதுதான். இன்றேல், அவர்களுடைய எதிர்காலமும் தொழிலாளர் வர்க்கத்தின் எதிர்காலமும் மேலும் மேலும் துன்பம் தருவதாகவே இருக்கும். எனவே சம்பள கமிஷனும் அரசாங்கமும் தந்துள்ள காரணங்களை ஏற்க இயலாதவனாக இருக்கிறேன். ஏனெனில் அவை ஊழியர்களுக்கு நியாயத்தை மறுக்கின்றன. நாட்டின் இன்றைய பொருளாதார நிலையைக் கணக்கில் எடுக்கத் தவறுகின்றன.

"தென் பிராந்திய ரயில்வே லேபர் யூனியனின் மத்திய நிர்வாகக் கமிட்டி இம்மாத இறுதியில் கூடி இந்த அறிவிப்பையொட்டி எழுந்துள்ள நிலைபற்றியும், எடுக்கப்படவேண்டிய நடவடிக்கைகள் பற்றியும் பரிசீலிக்கவிருக்கிறது."

## இத்தாலியில் ஐசன்ஹோவர் வரவேற்பும் அரசாங்க விருந்தும்

ரோம், டிச. 4—

அமெரிக்க ஜனாதிபதி, பெரும் மழைக்கிடையே இருதய பூர்வமான வரவேற்பை பெற்றுக்கொண்டு இன்றிரவு இத்தாலிய ஜனாதிபதி ஜியோவானி க்ரோன்சி யுடனும் இதர அரசாங்கத் தலைவர்களுடனும் உலக விவகாரங்கள் குறித்து பேச்சுவார்த்தை ஆரம்பித்தார். இப்பேச்சுவார்த்தை ஆயிரிஞல் மாளிகையில் ஐசன்ஹோவருக்காக ஒதுக்கப்பட்டுள்ள அறையில் நடைபெற்றது.

அமெரிக்காவின் ராஜ்ய உதவிக் காரியதரிசி ராபர்ட் மர்பியும், இத்தாலிய அயல்நாட்டு மந்திரி சிக்னர் ஜியூசிபி பெல்லாவும், இதர தூதுவர்களும் ராஜாங்க அதிகாரிகளும் பேச்சுவார்த்தையின்போது உடனிருந்தனர். உலக விவகாரங்கள் குறித்து மேலும் சம்பிரதாய பூர்வமான பேச்சுவார்த்தை நாளை தொடரும். அப்போது இத்தாலிய பிரதமர் சிக்னர் ஆண்டோனியோ செக்னியும் கலந்துகொள்வார்.

அமெரிக்க ஜனாதிபதியின் விஜயத்தை ஒட்டி இத்தாலிய ஜனாதிபதியும் திருமதி க்ரோன்லியும் 70 விருந்தினர்களுக்கு விருந்துபசாரம் நடத்தினர். இவ்விருந்தில் மேஜர் ஜான் ஐசன்ஹோவரும், அவரது மனைவி பார்பாராவும் கலந்துகொண்டனர்.

## நாசரின் இந்திய விஜயம் ஒத்திவைப்பு

கெய்ரோ, டிச. 4—

அரபுக் குடியரசின் ஜனாதிபதி நாசர் அடுத்த மாதத்தில் இந்தியாவுக்கு விஜயம் செய்வதாக இருந்த தற்காலிகத் திட்டம் கால வரையறையின்றி ஒத்திவைக்கப்பட்டுள்ளது, என்று அதிகாரபூர்வமான வட்டாரங்களிலிருந்து இன்று தெரியவந்தது.

இந்தியக் குடியரசு தின விழாவில் பங்கெடுத்துக் கொள்வதற்கு ஆரம்பத்தில் நாசர் விருப்பம் தெரிவித்திருந்தார்.

ஆனால் மொராக்கோ மன்னரும், இனி அதிபரும் ஜனவரியில் கெய்ரோ விஜயம் செய்யவிருப்பதை முன்னிட்டு, நாசரின் இந்திய விஜயம் ஒத்திப்போடப்பட்டது, என்று கூறப்படுகிறது.

## சணல் ஆலைத் தொழிலாளர் பொது வேலைநிறுத்தம்

### டிச. 14 ல் நடத்த முடிவு

கல்கத்தா, டிச. 4—

மேற்கு வங்காளம், பீஹார், உத்தரப் பிரதேசம், மத்தியப் பிரதேசம், ஆந்திரம் உள்ளிட்ட எல்லா ராஜ்யங்களிலுமுள்ள சணல் ஆலைத் தொழிலாளர்கள் டிச. 14ந் தேதி அடையாளப் பொது வேலைநிறுத்தம் செய்வார்கள். இவ்வாறு வேலைநிறுத்தம் செய்ய ஹிந்த் மஸ்தூர் சங்கம், ஐக்கியதொழிற்சங்கக் காங்கிரஸ், மத்திய சங்கங்கள் அறைகூவல் விடுத்துள்ளன.

இவ்வேலை நிறுத்தத்திற்கு அ. இ. தொ. ச. காங்கிரஸ், இ. தே. தொ. ச. காங்கிரஸ் இரண்டிலும் இணைக்கப் பெற்றுள்ள சணல் ஆலைத் தொழிலாளர் சங்கங்களும் ஆதரவு அளிக்கும் என்று தெரிகிறது.

இத்தொழிலில் ஈடுபட்டுள்ள சுமார் 2 லட்சம் தொழிலாளர்களின் போனஸ், சம்பள உயர்வு, சம்பள நிர்ணய போர்டு நியமனம், வேலை நிர்ப்பந்தங்களை ஒழிப்பது போன்ற கோரிக்கைகளை ஆதரித்தே இந்த வேலைநிறுத்தம் நடக்கவிருக்கிறது.

### வீட்டு வேலைக்காரருக்கு பாதுகாப்புச் சட்டம்

புதுடில்லி, டிச. 4—

வீடுகளில் வேலை பார்த்துவரும் தொழிலாளர்களுக்கு வேலை வசதிகளைச் சீர்திருத்தி நலன் செய்யும் பாதுகாப்புச் சட்டம் நிறைவேற்றப்படவேண்டும் என்று ராஜ்ய சபையில் காங்கிரஸ் எம். பி. ராஜபோஜ் ஒரு மசோதா பிரேரேபித்தார். சிதா பரமானந்த், சௌஹான், பேராசிரியர் வாடியா, ஆர். கே. மாளவியா முதலியோர் ஆதரித்தார்கள். நோக்கங்கள் நல்லதே ஆயினும் இச்சட்டம் நடைமுறை சாத்தியமல்ல என்று சர்க்கார் தரப்பில் கூறப்பட்டது.

## காங்கிரஸ் தலைவருக்கு வரவேற்பு

### கிராமவாசி நாட்டின் முதுகெலும்பு

### சஞ்சீவி ரெட்டி பேச்சு

கர்னூல், டிச. 4—

இந்திய தேசிய காங்கிரசின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கும் ஆந்திர மாநில முதலமைச்சர் என். சஞ்சீவி ரெட்டிக்கு இங்கு வரவேற்பளிக்கப்பட்டது. ராஜ்ய தலைநகருக்கு செல்லும் வழியில் இங்கு வந்திறங்கியபோது இவ்வைபவம் நடைபெற்றது.

மாலைகள் அணிவிக்கப்பட்டு, அலங்கரிக்கப்பட்ட ஜீப்பில் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டார். 74 ஜோடி காளைகள்—காங்கிரஸ் ஸ்தாபனம் தோன்றிகடந்து சென்ற காலத்தைக் குறிக்கும் பொருட்டு — முன்னால் சென்றன. நகர மக்களும், பள்ளிச் சிறுவர்களும் பாதையின் இரண்டு பக்கங்களிலும் வரிசையாக நின்று ஆரவாரித்தனர்.

#### ஜில்லா பரிஷத்தில் சஞ்சீவி

சஞ்சீவிரெட்டி பேசியதாவது, ஆந்த[illegible] ராஜ்யம் சரியான பாதையில் செல்[illegible] என்று திருப்[illegible] பதியில்தான் ராஜ்ய முதல் மந்திரி பதவியை துறக்கப் போவதாக அவர் இன்று கூறினார். இதுவரை [illegible] நடந்தது மாதிரி இனிமேலும் தங்களது ஒத்துழைப்பை அரசாங்கத்துக்குக் கொடுக்குமாறு மக்களை அவர் கேட்டுக்கொண்டார்.

கர்னூல் ஜில்லா பரிஷத்தின் தொடக்க விழாவில் பேசும்போது சஞ்சீவிரெட்டி மேலும் கூறியதாவது: புதிய பஞ்சாயத்து திட்டத்தை வெற்றிபெறச்செய்ய மக்களிடையே ஒத்துழைப்பு தேவை. நீர்ப்பாசனம், கல்வி, பொதுசுகாதாரம் இவற்றில் ஆந்திரம் அடைந்துள்ள முன்னேற்றத்தைக் குறிப்பிட்டு விட்டு எல்லா வளர்ச்சித் திட்டங்களிலும் ஆந்திரா முன்னிலைக்குச் செல்ல முயலுகின்றது. கிராமவாசிதான் நாட்டின் முதுகெலும்பு. வருங்காலத்தில் இவர்களிடம்தான் அதிகமான அதிகாரம் கொடுக்கப்படுமென் [illegible] (பி.டி.ஐ.)

## சோவியத் தூதுகோஷ்டியினருக்கு மீனம்பாக்கம் விமான நிலையத்தில் நல் வரவேற்பு

சென்னை, டிச. 4—

இன்று மாலை 4-20 மணிக்கு மீனம்பாக்கம் விமான நிலையத்தில் ஹைதராபாத்திலிருந்து வந்து சேர்ந்த சோவியத் தூது கோஷ்டியினருக்கு, இந்திய — சோவியத் கலாசாரக் கழக சென்னைக் கிளை தலைவர் டைரக்டர் கே. சுப்ரமணியம், செயலாளர்கள் கல்யாணி குமாரமங்கலம், ஜிம் முதலியோரும், சென்னை சமாதானக் கமிட்டி, மதராஸ் ஹார்பர் தொழிலாளர் சங்கம், கிண்டி எஸ்டேட் அண்டு ஜெனரல் ஒர்க்கர்ஸ் யூனியன், சென்னை சர்க்கார் மராமத்து இலாகா ஊழியர் சங்கம், இஞ்சினீயரிங் அண்டு பவுண்டரி தொழிலாளர் சங்கம், செங்கற்பட்டு ஜில்லாவைச் சேர்ந்த தோல்பதனிடும் தொழிலாளர் சங்கம், கர்சான் கார்க் தொழிலாளர் சங்கம், மீனம்பாக்கம் பின்னி இஞ்சினீயரிங் தொழிலாளர்கள், இந்திரா காட்டன் மில் தொழிலாளர்கள் சார்பாக பல பிரதிநிதிகள் மாலை சூட்டி அன்புகனிந்த நல் வரவேற்பளித்தனர்.

சோவியத் யூனியனிலிருந்து வந்துள்ள பேராசிரியர் ஜி. செர்டிசென்கோவ், அலிஸா நூர் ஹுஹனோவும் டெல்லியிலுள்ள சோவியத் தூதர் காரியாலயத்திலிருந்து வந்துள்ள டாக்டர் தமரோவும் பேரன்போடு நன்றி தெரிவித்தனர்.

### நேபாள மாணவர், வாலிபர் ஆர்ப்பாட்டம்

#### நேருவின் அறிக்கைக்கு ஆட்சேபம்

காத்தமண்டு, டிச. 4—

நேபாளம் சம்பந்தமாக அண்மையில் இந்தியப் பிரதமர் நேரு வெளியிட்ட அறிக்கைக்கு ஆட்சேபம் தெரிவிக்கும் முறையில் மாணவர்களும், வாலிபர்களும் கொண்ட ஒரு ஊர்வலம் இங்கு உள்ள இந்திய ஸ்தானிராலயத்திற்குச் சென்று, ஸ்தானிகரிடம் பிரதமர் நேருவுக்கு விலாசமிட்ட ஒரு மகஜர் சமர்ப்பித்தனர்.

"நேபாளம் நடுநிலைமையையே கடைப்பிடிக்கும்; இந்திய விஸ்தரிப்புக்காரர்களுக்கு இடங்கொடோம்;

நேபாளத்திலுள்ள இந்திய ராணுவக் கண்காணிப்பு முகாம்களை வாபஸ் பெறுக; இந்திய சகோதரர்களே "நேபாளத்தை தொடாதீர்" என்ற கோஷங்களை ஆர்ப்பாட்டக்காரர்கள் ஒலித்தனர்.

நேபாள மாணவர் தேசிய சம்மேளனம், நேபாள தேசிய வாலிபர் சம்மேளனத்தின் சார்பில் இந்த ஆர்ப்பாட்டம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

### 3-வது திட்டத்திற்கு மே. ஜெர்மனி உதவி

பான், டிச. 4—

இந்தியாவின் 3வது ஐந்தாண்டு திட்டத்திற்கு மேற்கு ஜெர்மனி உதவி செய்யும் என்று அயல் நாட்டு மந்திரி இலாகா காரியதரிசி டாக்டர் ஹில்கர் வான் ஷேர்பென்பர்க் பாராளுமன்றத்தில் வெளியிட்டார். (ராய்ட்டர்)

# நீலகிரி மாவட்டச் செய்திகள்

## விலைஉயர்வு-எதிர்ப்பு இயக்கம்

### குன்னூர்

சர்வகட்சி விலைவாசிக் குறைப்புக் கமிட்டியின் சார்பில் 22-11-59-ல் ஜவகர் பேட்டையில் தோழர் எம். முத்துசாமி மேஸ்திரி தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது.

தோழர்கள் ஆர். உமாநாத் (கம்யூ.) கோவை செழியன் (தி. மு. க.) நாராயணன் (தமிழரசுக் கழகம்) ஆகியோர் உணவு இயக்கப் பிரச்சினைகளை விரிவாகப் பேசினர். கூட்ட ஆரம்பத்தில் ஊர்வலமும் நடைபெற்றது.

### உதகை

தமிழரசுக் கழகத் தலைவர் மா. சின்னசாமி தலைமையில் போஸ் மைதானத்தில் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்திற்கு முன்னால் ஊர்வலம் நடைபெற்றது தோழர்கள் பிச்சைமுத்து, விஜயகோபால், ஆர். உமாநாத், (கம்யூ) சவுகத்அலி, ஜயராமன் (தி. மு. க) தமிழரசுக் கழகத் தோழர்களும் பேசினர்.

### எமரால்ட்

எமரால்டு முகாமில் 21-11-59-ல் மிகப் பெரிய அணிவகுப்பு, ஊர்வலம் நடைபெற்றது. மாலை பொதுக்கூட்டத்தில் வி. எஸ். வள்ளிநாயகன், போ. கோவிந்தன் (கம்யூ.) பரமேஸ்வரன் (தி. மு. க.), தேசிய அணைக்கட்டுத் தொழிலாளர் சங்கப் பிரமுகர்கள் ஆகியோரும் பேசினர். பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# சட்ட மன்ற உறுப்பினர்களை விலக்கும் உரிமை

## கம்யூனிஸ்ட் உறுப்பினர் பிரேரணை ராஜ்யசபையில் நிராகரிக்கப்பட்டது

புதுடில்லி, டிச. 4—

சட்ட மன்ற, பார்லிமெண்ட் உறுப்பினர்களைத் தொகுதி மக்கள் விரும்பினால் அவரை அந்த உறுப்பினர் பதவியிலிருந்து நீக்குவதற்கான உரிமை வழங்கும் பிரேரணை ஒன்று ராஜ்ய சபையில் இன்று கொண்டுவரப்பட்டது.

இந்தப் பிரேரணையை கம்யூனிஸ்ட் உறுப்பினர் பூபேஷ் குப்தா சபையில் பிரேரேபித்தார்.

இந்தப் பிரேரணையில் யாதொரு முக்கியமும் இல்லை என்றும், இது இந்திய அரசியல் சட்டத்தையே மீறும்வகையில் இருக்கிறது என்றும் சட்ட மந்திரி ஏ. கே. சென் குறிப்பிட்டார்.

பூபேஷ் குப்தா இதுபற்றிப் பேசுகையில் மந்திரியின் கூற்றை மறுத்தார்.

சபை இந்தப் பிரேரணையைத் தள்ளுபடி செய்தது.

### அசாம் சட்டசபைக்கு புதிய சபாநாயகர் டிசம்பர் 9-ல் தேர்ந்தெடுக்கப்படுவார்

ஷில்லாங், டிச. 4—

அசாம் சட்டசபை டிசம்பர் 9ம் தேதி புதிய சபாநாயகரைத் தேர்ந்தெடுக்கும். தற்போதைய சபாநாயகர் தேவ்கந்த் பருவாவின் தேர்தலை, தேர்தல் நீதிமன்றம், செல்லாது என்று தீர்ப்பளித்ததே இதற்குக் காரணம்.

திரு. பருவா அண்மையில்நடைபெற்ற உப-தேர்தலில் போட்டியிட்டு கம்யூனிஸ்டு அபேட்சகரால் தோற்கடிக்கப்பட்டது தெரிந்ததே. அசாம் சட்டசபை டிச. 7ம் தேதி கூடவிருக்கிறது. (பி.டி.ஐ.)

# குமரி மாவட்டச் செய்திகள்

## சர்வ கட்சி உணவு இயக்கம்

### வியாபார ஸ்தாபனத் தொழிலாளர் சங்கம்

நாகர்கோவில், நவ. 3—

நாகர்கோவில் வியாபார ஸ்தாபனங்களில் பணியாற்றும் தொழிலாளர்களின் கூட்டம் தோழர் கே. பி. சுப்ரமண்யம் தலைமையில் 7-11-59-ல் நடைபெற்றது.

அக்கூட்டத்தில் ஏற்படுத்தப்பட்ட நாகர்கோவில் வியாபார ஸ்தாபனத் தொழிலாளர் சங்கத்திற்கு தோழர் சி. பி. இளங்கோ (எம்.சி) தலைவராகவும், பி. சி. வலிங்கநாதன் காரியதரிசியாகவும், தேர்ந்தெடுக்கப்பட்டனர். 11 பேர் கொண்ட கமிட்டியும் தேர்ந்தெடுக்கப்பட்டது.

### சென்னை பீடித் தொழிலாளர் சங்கங்களின் பிரதிநிதிகள் கோரிக்கை

சென்னை, டிச. 3—

சென்னை நகர பீடித் தொழிலாளர் சங்கங்களின் கூட்டமொன்று 6-11-59ல் சென்னைத் தொழிலாளர் சங்கக் கட்டிடத்தில் தோழர் ரிச்சர்ட் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்தில் சென்னை ஐக்கிய பீடித் தொழிலாளர் சங்கம், தமிழ்நாடு பீடித் தொழிலாளர் சங்கம், தெ. இந்திய பீடித் தொழிலாளர் சங்கம் ஆகியவற்றின் பிரதிநிதிகள் கலந்துகொண்டனர். தோழர்கள் எஸ். டி. ராதா, எஸ். ஏ. குலாம், இ. ராமச்சந்திரன் முதலியோர் பீடித் தொழிலாளர் நிலைபற்றியும், முதலாளிகளின் போக்குபற்றியும் விளக்கிப் பேசினர்.

#### தீர்மானங்கள்

பின்னர், சென்னை சர்க்கார் கொண்டுவந்துள்ள பீடித் தொழிலாளர் சட்டத்தில் பல குறைபாடுகள் இருந்தபோதிலும் அதை உடனே அமுல் நடத்த வேண்டுமென்று கோரியும், மற்றும் பல தீர்மானங்களும் நிறைவேற்றப்பட்டன.

### சைதாப்பேட்டை (வேலூர்) சர்வகட்சிக் கூட்டம்

வேலூர், டிச. 4—

சைதாப்பேட்டை (வேலூர்) யில் சர்வகட்சி உணவியக்கப் பொதுக்கூட்டம் நவ. 21ல் நடைபெற்றது. வி. டி. குப்புசாமி தலைமைவகித்தார். வி. என். கண்ணன், வி. கண்ணன் (கம்யூ.) புரட்சி பாபு, வி. என். ராஜா (தி.மு.க.) பூ. கண்ணன், எம். எஸ். கிருஷ்ணமூர்த்தி (தமிழரசு) ஆகியோர் பேசினர்.

### எம். கே. டி. பாகவதர் கலா மன்றம்

குடியாத்தம், டிச. 1—

எம். கே. தியாகராஜபாகவதர் கலா மன்ற நாடகக் குழுவினர் கூட்டம் நெல்லூர் பேட்டையில் நடைபெற்றது. திரு. எல். எம் எஸ். தட்சிணாமூர்த்தி (எம். சி.) தலைமை வகித்தார். பிறகு நடைபெற்ற மன்ற நிர்வாகிகள் தேர்தலில், தி. சா. சுப்ரமண்யம் (எம். சி.) தலைவராகவும், என். எம். சுப்ரமண்யம் (எம். சி.) எல். எம். எஸ். தட்சிணாமூர்த்தி (எம்.சி.) உபதலைவர்களாகவும், கே. எஸ். பக்தவத்சலம் செயலாளராகவும், எஸ். கே. விநாயகம் பொருளாளராகவும் எஸ். கைலாசம் துணைச் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். திரு. வி. கே. கோதண்டராமன் (எம். எல். ஏ.) அவர்களை மன்ற கௌரவத் தலைவராக இருக்கும்படி கேட்டுக் கொள்வதென்று முடிவு செய்யப்பட்டது.

உணவுப் பொருள் விலைக் குறைப்பு சர்வகட்சி கமிட்டி அமைப்புக்கூட்டம் 20-11-59-ல் திங்கள் சந்தையில் தோழர் எஸ். எஸ். குட்டி தலைமையில் நடைபெற்றது.

தோழர்கள் சொ. ஜனார்த்தனன், பி. திவாகரன், எஸ. நடேசன் (கம்யூ), இ ரங்கன், எம். எஸ். தீன், டி. செல்லம் (தி. மு. க.), எஸ். எஸ். குட்டி (பீடித் தொழிலாளர் சங்கம்) ஆகியோரடங்கிய கமிட்டி நிறுவப்பட்டது.

தோழர்கள் சொ. ஜனார்த்தனனும் இ. ரங்கனும் கமிட்டியின் கன்வீனர்களாக நியமிக்கப்பட்டனர்.

### பொதுக்கூட்டம்

22-11-59 மாலையில் திங்கள் சந்தை திடலிலிருந்து சர்வ கட்சிக் கமிட்டியின் சார்பில் ஊர்வலம் புறப்பட்டு நெய்யூர், இரணியல் கோணம், கண்டன் விளை, இரணியல் வழியாகத் திடலை அடைந்தது.

தோழர் சொ. ஜனார்த்தனன் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர்கள் பி. திவாகரன், எஸ். எஸ். குட்டி, இ. ரங்கன் எஸ். எம். ஷாகுல் ஹமீது, எம். எஸ். தீன் ஆகியோர் உணவுப் பொருள்களின் விலைஉயர்வை சர்க்கார் கட்டுப்படுத்தக் கோரிப் பேசினர்.

தீர்மானம் நிறைவேற்றி சர்க்காருக்கு அனுப்பப்பட்டது.

### நாகர்கோவில்

22-11-59-ல் நாகர்கோவில் நகரசபைத் திடலில் திரு. ஏ. சி. எஸ். பிள்ளை தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர்கள் சி. சங்கர் (கம்), வி. எம். ஜான் (நாம் தமிழர்), ஜி. பகவதியப்பன் (தமிழரசுக் கழகம்), ஜி எம். ஷா (தி. மு. க.) கே. பி. ஜானகியம்மாள் (கம்யூ) கே. நாகலிங்கம், (நகர்நலக் கூட்டணி), எஸ். முத்து (தி. மு. க.) ஆகியோர் சர்க்காரின் உணவுக் கொள்கையைக் கண்டித்துப் பேசினர்.

### புத்தேரியில்

குமரி ஜில்லா சர்வகட்சி விலைவாசிக் குறைப்புக் கட்டியின் சார்பில் 19-11-59-ல் புத்தேரியில் திரு. வேலாயுதப் பெருமாள் பிள்ளை தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் தோழர்கள் என். வேலாயுதம், எம். வேலப்பன், எல். வேலாயுதம் ஆகியோர் விலை உயர்வைத் தடுக்க சர்க்கார் தக்க நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தினர்.

### உணவுப் பொருள்களின் விலை கட்டுப்படுத்தப்பட வேண்டும்

#### மாதவரம் பஞ்சாயத்துபோர்டு தீர்மானம்

மாதவரம், டிச. 2—

மாதவரம் (சென்னை) ஊராட்சி மன்றத்தின் சாதாரணக் கூட்டம் தலைவர் சி. கே. மாதவன் தலைமையில் நடைபெற்றது. உணவுப் பொருள்கள் கொள்முதல் பற்றிய அரசாங்கத்தின் கொள்கையைக் கண்டித்தும் படி அரிசி 12 அணாவுக்குத் தரக்கோரியும் 500 குடும்பங்களுக்கு ஒரு நியாயவிலைக் கடை திறக்க கோரியும் வற்புறுத்தும் தீர்மானமொன்றை மா. பொ. சுப்பிரமணியம் (கம்யூ) பிரேரேபித்தார். திரு. த. கோவிந்தசாமி (ஐ. மு.) ஆதரித்தார். தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியது.

பஞ்சாயத்துத் தலைவர் திரு. சி. கே. மாதவன், உறுப்பினர்கள் கே. பி. ராகவன், த கோவிந்தசாமி ஆகியோர் உணவு விலையைக் கட்டுப்படுத்தக் கோரும் பஞ்சாயத்துபோர்டு தீர்மானங்களடங்கிய மகஜரை செங்கற்பட்டு மாவட்டக் கலெக்டரிடம் நவ. 19ல் அளித்தனர்.

### தஞ்சை ஓட்டல் தொழிலாளர் சங்கம்

தஞ்சை, டிச. 1—

29-11-59ல் தஞ்சை ஓட்டல் தொழிலாளர் சங்கக் கூட்டம் உபதலைவர் கே. டி. ராமன்குட்டி நாயர் தலைமையில் நடந்தது. மங்களாம்பிகா லாட்ஜ் நிர்வாகம் தொழிலாளர்களைப் பழிவாங்குவதைக் கண்டித்தும் நிர்வாகத்தின் போக்கை மாற்றிக்கொள்ள வேண்டுமென்றும் ஒரு தீர்மானம் நிறைவேறியது.

கீழநம்மங்குறிச்சி

### பஞ்சாயத்து போர்டு உப-தேர்தலில் கம்யூனிஸ்டு வெற்றி

திருத்துறைப்பூண்டி, நவ. 30—

21-11-59-ல் கீழநம்மங்குறிச்சி பஞ்சாயத்து போர்டு உப தலைவர் தேர்தல் நடந்தது. தோழர் ஆர். எம். செல்லத்துரை (கம்யூனிஸ்ட்) உப-தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

# சென்னை சட்டசபைக் கூட்டம் தொடங்கியது

## நல்லாட்சிக்குச் செயலாற்ற சம்பிரதாய அழைப்பு!

### விலைவாசி உயர்வு பற்றிக் கவலை மட்டும் தெரிவிப்பு

### உப்புச் சப்பற்ற கவர்னர் உரை

சென்னை, டிச. 5—

இன்று சென்னை சட்டசபைக் கூட்டம் ஆரம்பமானது. மேல் சபை, கீழ் சபை இரண்டின் இணைப்புக் கூட்டத்தில் கவர்னர் திரு. விஷ்ணுராம்மேதி பேசினார்.

கவர்னரின் சம்பிரதாயப் பேச்சு உப்புச்சப்பு இல்லாது வழக்கமாக பாடும் சாதனைகளின் பல்லவிபோல அமைந்திருந்தது.

உணவு விலைகள் ஏற்றத்தை தடுக்க சர்க்கார் என்ன நடவடிக்கைகள் எடுக்கப் போகின்றது என்பது பற்றியோ நிலச்சீர்திருத்தம் பற்றியோ, சர்க்கார் ஊழியர்களின் சம்பள உயர்வு பற்றியோ கவர்னர் தமது உரையில் ஏதும் கூறவில்லை.

கவர்னரின் பேச்சை தி. மு. க. சட்டசபைக் கட்சியின் 15 அங்கத்தினர்களும் பகிஷ்கரித்து இன்று சட்டசபைக்கு வரவில்லை.

#### கவலையைத் தருகிறது

கவர்னர் தமது உரையில் குறிப்பிட்டிருப்பதாவது:

பருவ மழை திருப்திகரமாக இருந்து வந்திருக்கிறது. போதுமான பாசன நீர் ஏரிகளில் இருக்கிறது. விளைச்சலும் பரவாயில்லை. இருந்தாலும் அகவிலை, குறிப்பாக உணவு தானியங்களின் விலைகள் ஏறுமுகமாக இருப்பதுதான் கவலையைத் தருவதாக இருக்கிறது!

#### தடுக்க முடியாதாம்!

வளர்ச்சி அடைந்துவரும் பொருளாதார அமைப்பில் விலையேற்றப் போக்கை முழுவதும் தவிர்க்க முடியாது! விவசாயப் பொருள்களின் விலை ஏற்றம் மக்களில் பெரும் பகுதியினருக்கு உடனடியாக நன்மை பயப்பதாக இருக்கலாம். ஆனால் இவ்விலை ஏற்றம் நகர்ப்புறங்களிலே, அதிலும் குறிப்பிட்ட வருமானமுள்ள மக்களுக்குப் பெரும் கஷ்டத்தை விளைவித்திருக்கின்றது!

உணவுப் பொருள்களின் விலை ஏற்றத்தைத் தடுக்கவும் வேண்டிய தானியத்தைச் சேமித்து வைக்கவும் சர்க்கார் நடவடிக்கை எடுத்தது!

ஆனால் இந்த நடவடிக்கைகள் பயன் தரவில்லை என்பதை கவர்னர் ஒப்புக்கொண்டார். "அண்டை மாநிலங்களில் விலைக் கட்டுப்பாடு போதுமான அளவு அமுலாக்கப்படாததே இந்தத் தொல்லைகளுக்கு முக்கிய காரணம்" என்று கவர்னர் கூறினார்.

#### நியாயவிலைக் கடைகள்

ஒரு லட்சம் டன்னுக்கு மேல் சர்க்கார் கொள்முதல் செய்ததாகவும், மத்திய உதவியுடன் 2000 நியாயவிலைக் கடைகளை சர்க்கார் ஏற்படுத்தியிருப்பதாகவும், மாதமொன்றுக்கு சுமார் 30,000 டன்கள் நியாய விலைக் கடைகள் மூலம் வினியோகிக்கப்படுவதாகவும், சம்பா அறுவடை முடிந்து தானியம் விற்பனைக்கு வரும்வரை இந்தக் கடைகள் நடத்தப்படும் என்றும் கவர்னர் தெரிவித்தார்.

ஆண்டு ஒன்றுக்கு 3 லட்சம் டன் உபரியாக சென்னை ராஜ்யத்தில் உற்பத்தி செய்யப்படும் என்றும் இரண்டாவது திட்ட முடிவில் 53 லட்சம் டன் உணவு தானியம் உற்பத்தியாகும் என்றும் கவர்னர் தெரிவித்தார்.

அமெரிக்க போர்டு நிறுவனத்தின் உதவியுடன் குறிப்பிட்ட ஜில்லாவில் விவசாய அபிவிருத்தி திட்டமிட்ட முறையில் நடைபெறும் என்றும் கவர்னர் கூறினார்.

விவசாயிகளுக்கு கடன் வசதி செய்வதற்காகக் கூட்டுறவு துறையில் பல்வேறு நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டிருப்பதாகவும், கிராம மக்களில் 40 சதவிகிதம் இதனால் பயன்பெறுவதாகவும் கவர்னர் கூறினார்.

இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் சேர்க்கப்பட்ட எல்லா திட்டங்களும் திருப்திகரமாக நிறைவேற்றப்பட்டு வருவதாகவும், திட்டமிட்ட 152 கோடி ரூபாய்க்கு பதிலாக ரூ. 176 கோடி செலவிடப்படும் என்று கணக்கிடப்படுவதாகவும் கவர்னர் கூறினார்.

மூன்றாவது திட்டத்தில் அண்டைநாடுகளின் உபரியான பாசன நீர் சென்னைக்கு உபயோகமாகும் வகையில் திட்டங்கள் வகுக்கப்பட வேண்டும் என்றும், இந்தத் திட்டம் நிறைவேற சர்வகட்சி, சகல பகுதி மக்களின் ஆதரவு தேவை யென்றும் கவர்னர் கூறினார்.

நில உடைமைக்கு மேல்வரம்பு நிர்ணயிக்கும் மசோதாவின் விவரங்கள் தயாரிக்கப்பட்டு வருவதாக கவர்னர் கூறினார்.

(சில நாட்களுக்கு முன் உச்ச வரம்பு மசோதா தயாராகி விட்டது. கண்டிப்பாக இந்த சட்டசபைக் கூட்டத்தில் வந்துவிடும் என்று முதல் மந்திரி திரு காமராஜர் நிருபர்களை அழைத்து தகவல் வெளியிட்டதும், இப்போது அவர் சொன்னபடி மசோதா வரவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கது. — ஆசிரியர்)

அரசியல் வேறுபாடுகளை மறந்து நல்லாட்சி நிலைபெற எல்லோரும் உதவவேண்டும்; குறிப்பாக வெளியிலிருந்து இந்திய எல்லைக்கு அபாயம் நேரலாம் என்றிருக்கும் இந்நிலையில் நம் அனைவருக்கும் குறிக்கோள் ஒன்றுதான் என்ற முறையில் சட்டசபை அங்கத்தினர்கள் கட்டுப்பாடாக நடந்துகொள்ள வேண்டும் என்று கூறி கவர்னர் மேதி தமது பேச்சை முடித்தார்.

#### எதிர்க்கட்சிகள் கருத்து

கவர்னர் உரையில் குறிப்பிடும்படி ஒன்றும் இல்லை. விலைவாசிகளைக் குறைக்க சர்க்கார் எந்த நடவடிக்கையும் எடுக்கப்போவதாகத் தெரியவில்லை. அதே மாதிரி நிலச்சீர்திருத்தம் பற்றி எதுவுமே குறிப்பிடப்படவில்லை. சர்க்கார் ஊழியர்களின் சம்பள உயர்வு பற்றியும் எதுவும் குறிப்பிடப்படவில்லை.

இவ்வாறு எம். கல்யாண சுந்தரம் தம் கருத்தை வெளியிட்டார். இதே கருத்தை எதிர்க்கட்சித் தலைவர் திரு. வி. கே. ராமசாமி முதலியாரும் வெளியிட்டார்.

## இலங்கை பார்லிமெண்ட் கலைப்பு எதிர்க்கட்சியினர் வரவேற்பு

கொழும்பு, டிச. 5—

இலங்கைப் பார்லிமெண்டை கலைத்து மறுதேர்தல் நடத்த உத்தரவிட்டிருப்பது மந்திரிகளுக்கே அதிசயமாக வந்துள்ள திடீர்ச் செய்தியாக இருக்கிறது. ஆட்சிப் பீடத்திலுள்ள கட்சியினரையோ சக மந்திரிகளையோ, கலந்துகொள்ளாமலே பிரதமர் தகநாயகா இந்த முடிவுக்கு வந்துள்ளார்.

இந்த முடிவை எதிர்க் கட்சியினர் வரவேற்றுள்ளனர். வழக்கப்படி நடக்கவேண்டிய பொதுத் தேர்தல் இன்னும் ஓராண்டிற்குப் பிறகு நடத்தப்படவேண்டும். இப்போது சர்க்கார் வேறு கதி மோட்சமின்றி இந்த முடிவை எடுத்துள்ளதாகக் கருதப்படுகிறது.

1960 மார்ச் (தேர்தல் வரை) தகநாயகா சர்க்கார் காபந்து சர்க்காராக இருக்கும். பார்லிமெண்ட் கலைக்கப்பட்டதால் உப தேர்தல்கள் ரத்தாகிவிட்டன.

### பஞ்சாலைத் தொழில் பற்றிய மத்திய சம்பள போர்டு

பம்பாய் டிச. 5—

பஞ்சாலைத் தொழிலில் சம்பள நிர்ணயம் உள்ளிட்டவற்றை முடிவு செய்வதற்காக நிறுவப்பெற்ற மத்திய சம்பள போர்டு இன்று தனது ஒரு முகமான அறிக்கையை சர்க்காருக்குச் சமர்ப்பித்துள்ளது. இந்த போர்டில் ஜீஜிபாய் (தலைவர்) அசோக் மேத்தா எம். பி., பேராசிரியர் எம். வி. மத்தூர், எஸ். ஆர். வாசவதா, ஜி. ராமானுஜம், அரவிந்த் பேட்வால், பாரத்ராம் முதலியோர் உறுப்பினர்களாக யுள்ளனர்.

தொழிலாளர்சார்பில் நாட்டில் மிகப் பெரிய மத்திய தொழிற் சங்கமான அகில இந்திய தொழிற்சங்கக் காங்கிரஸிற்கு இந்தக் குழுவில் பிரதிநிதித்துவம் அளிக்காமல் பாரபட்சம் செய்தது தெரிந்ததே.

### மேற்கு வங்காளத்தில் வெள்ளத்தினால் பெருஞ்சேதம் 107 பேர்கள் மாண்டனர்

கல்கத்தா, டிச. 4—

மேற்கு வங்காளத்தில் சென்ற செப்டம்பர், அக்டோபர் மாதங்களில் ஏற்பட்ட புயல், வெள்ளப் பெருக்குகளின் காரணமாக 107 பேர்கள் மாண்டதாகவும், ஐம்பது லட்சம் மக்களுக்கு மேல் பாதிக்கப்பட்டதாகவும் அறிக்கையொன்று இன்றிரவு, ராஜ்ய சட்டசபை அங்கத்தினர்களுக்குக்கொடுக்கப்பட்டது அவ்வறிக்கையில் மேலும் குறிப்பிட்டிருப்பதாவது, வெள்ளப் பெருக்கினால் முப்பத்தோரு கோடி ரூபாய் மதிப்புள்ள விளை பயிரும் ஐந்து லட்சம் வீடுகளும் சேதமடைந்து ராஜ்யத்திற்கு பெரும் நஷ்டத்தை விளைவித்துள்ளது.

சென்ற நான்கு மாதங்களில் வெள்ளப் பெருக்கினால் பாதிக்கப்பட்டோருக்கு 368 லட்ச ரூபாய் செலவு செய்திருக்கிறது என்றும் கூறப்படுகிறது. (பி. டி. ஐ.)

### அல்ஜீரியா தீர்மானத்தை அமெரிக்கா ஆதரிக்க வேண்டும்.

#### அமெரிக்கப் பிரமுகர்கள் வேண்டுகோள்

நியூயார்க், டிச. 5—

அல்ஜீரியா சம்பந்தமாக ஐ. நா. சபையில் ஆசிய ஆப்பிரிக்க நாடுகள் கொண்டுவரும் தீர்மானத்தை அமெரிக்கா ஆதரிக்கவேண்டும். என்று 46 அமெரிக்கப் பிரமுகர்கள் கேட்டுக்கொண்டிருக்கிறார்கள். அவர்கள் கையொப்பமிட்டுள்ள வேண்டுகோளை ஐ. நா. சபையிலுள்ள அமெரிக்கப் பிரதிநிதிக்கும் அனுப்பி வைத்துள்ளார்கள்.

### பத்திரிகைகள்மீது தொடுத்த வழக்கு வாபஸ்

#### கேரள கவர்னராட்சியின் நடவடிக்கை

திருவனந்தபுரம், டிச. 5—

கேரள ஜனதா, எக்ஸ்பிரஸ் என்ற இரண்டு பத்திரிகைகள் மேல் அரசாங்கம் தொடுத்திருந்த வழக்கை திருவனந்தபுரம் செஷன்ஸ் நீதிபதி தள்ளுபடி செய்தார்.

இந்தப் பத்திரிகைகள் இரண்டும் முன்னாள் கம்யூனிஸ்ட் தொழில் மந்திரி டி. வி. தாமஸின் கௌரவத்தைப் பாதிக்கும் அளவிற்கான தவறான செய்திகளைப் பிரசுரித்ததற்காகவே இவ் வழக்குத் தொடரப்பட்டிருந்தது.

அரசாங்க வக்கீல் இந்த வழக்கை அரசாங்கம் மேலும் தொடர்ந்து நடத்தப் பிரியப்படவில்லை என்று குறிப்பிட்டார். அரசாங்கத்திற்கும் பத்திரிகைகளுக்கும் மத்தியில் சுமுக உறவு நிலவவேண்டும் என்று அரசாங்கம் விரும்புவதால் இந்த வழக்கை தள்ளுபடி செய்யவேண்டுமென்று அவர் கேட்டுக்கொண்டார்.

பி. சோ. உறுப்பினர் ஜனார்த்தனம் தொழில்மந்திரி லஞ்சம் வாங்கினார் என்று குறிப்பிட்டிருந்த ஒரு பேச்சை இப் பத்திரிகைகள் வெளியிட்டிருந்தன. இதன்பேரில் 22-12-58 அன்று இந்த வழக்கு தொடரப்பட்டது.

இப்போது உள்ள அரசாங்கம் வழக்கை தள்ளுபடி செய்யும்படி கேட்டுக்கொண்டது.

### லண்டன் பத்திரிகை அலுவலகத்தில் துணிகரக் கொள்ளை 25 ஆயிரம் பவுன் களவாடப்பட்டது

லண்டன், டிச. 5—

லண்டனிலுள்ள அசோசியேடட் நியூஸ் பேப்பர்ஸ் என்னும் பத்திரிகை அலுவலகத்தில் கொள்ளைக்காரர்கள் கடந்த புதன்கிழமையன்று பிரவேசித்து இரும்புப் பெட்டியை உடைத்து 25 ஆயிரம் பவுன்களைக் கொள்ளையடித்துச் சென்றனர்.

### சாகும்வரை உண்ணாவிரதம்

#### ம.பி. சர்க்கார் ஊழியர் சங்கத் தலைவர் முடிவு

போபால், டிச. 5—

மத்தியப் பிரதேச மந்திரிகள் காரியாலய ஊழியர் சங்கத்தின் தலைவர் ஆர். ஸ்ரீவத்சவா சாகும் வரை உண்ணாவிரதம் இருக்க முடிவு செய்து நேற்று முதல் உண்ணாவிரதமிருந்து வருகிறார். அக். 7ந் தேதி ஆட்சேப வேலை நிறுத்தம் செய்த துருக் ஜில்லா ஊழியர்களுக்குச் சம்பளப் பிடித்தம் செய்ததை ஆட்சேபித்தே அவர் இந்தப் போராட்டத்தில் இறங்கியுள்ளார்.

## போலீஸ் லாக்கப்பில் கொலையா? மரத்தில் தொங்கி தற்கொலையா?

### வேப்பூர் கொலை வழக்கில் சப்-இன்ஸ்பெக்டருக்கு சிறைத்தண்டனை

கடலூர் டிச, 5—

வேப்பூர் போலீஸ் ஸ்டேஷனில் குட்டு என்ற குட்டனை லாக்கப்பில் அடைத்து வைத்திருந்தபோது, அவருக்கு ஏற்பட்ட சாவு பற்றிய வழக்கில் தென்னாற்காடு மாவட்ட செஷன்ஸ் நீதிபதி கனம் கே ராமசாமி இன்று தீர்ப்புக் கூறினார். குட்டன் சாவு வழக்கில் சப்-இன்ஸ்பெக்டர் சி. டி. மில்ஸ் மீதும் ராஜன், நாராயணசாமி, குப்புசாமி, ஹபிபுல்லாகான் ஆகிய 3 போலீஸ்காரர்கள்மீதும் குற்றம் சாட்டப்பட்டு விசாரணை நடைபெற்று வந்தது. சாவு பற்றி தவறான தகவல் கொடுத்ததாக சப்-இன்ஸ்பெக்டருக்கு இ. பி. கோ. 203-வது செக்ஷன்படி ஒரு வருட கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டது. மற்ற மூன்று போலீஸ்காரர்களும் விடுவிக்கப்பட்டனர்.

ஒரு திருட்டு வழக்கில் கடந்த ஜூலை மாதம் 19-ம் தேதி லாக்கப்பில் அடைக்கப்பட்ட குட்டனிடமிருந்து தகவல் அறிவதற்காக இந்த 3 போலீஸ்காரர்களும் குட்டனை வதைத்ததினால் குட்டன் செத்துப்போனார் என்பது தான் இந்த மூவரின் மீதுள்ள வழக்கு என்று பிராசிகியூஷன் தரப்பில் குற்றம்சாட்டியிருந்தது.

#### மரத்தில் தொங்கியதாம்

ஆனால் மறுநாள் வேப்பூர் போலீஸ் ஸ்டேஷனுக்கு அருகிலுள்ள ஒரு மரக்கிளையில் குட்டனின் பிரேதம் தொங்கிக் கொண்டிருந்தது காணப்பட்டதாம். குற்றம் சாட்டப்பட்ட போலீஸார் தாங்கள் குற்றவாளிகள் அல்ல என்றும், குட்டன் தற்கொலை செய்துகொண்டு செத்துப் போனான் என்றும் கூறினார்கள்.

#### நம்பத்தக்கதாக இல்லை

இதுபற்றி நீதிபதி தன் தீர்ப்பில் குறிப்பிடுகையில், "செத்துப் போன குட்டனின் உடம்பில் காயங்கள் இருந்தன. இந்தக் காயங்கள் போலீஸ் ஸ்டேஷனில் ஜூலை 19ம் தேதி இரவில் குட்டன் இருந்தபோது ஏற்பட்ட காயங்களா அல்லது பிராசிகியூசன் சொல்லுகிறபடி ஏற்பட்ட காயங்களா என்று தெரியவேண்டும். இது விஷயமாக கூறும் சாட்சியங்கள் கோர்வையாகவுமில்லை, நம்பத்தக்கதாகவுமில்லை' என்று குறிப்பிட்டுள்ளார்.

#### பிராசிகியூஷன் லட்சணம்

வழக்கு நடத்திய பிராசிகியூஷன் (சர்க்கார்) இவர்கள்மீது கொண்டுவந்த குற்றச்சாட்டுகளை திருப்திகரமான முறையில் நிரூபிக்கவில்லையென்று நீதிபதி அபிப்பிராயப்பட்டார்.

நீதிபதி சப்இன்ஸ்பெக்டரைப் பற்றிக் குறிப்பிடுகையில், "போலீஸ் ஸ்டேஷனில் குட்டன் வதைக்கப்பட்டதை இந்த சப் இன்ஸ்பெக்டர் அறிந்து தானிருக்கவேண்டும். அல்லது வதைக்கப்பட்டுதான் இருக்க வேண்டுமென்றாவது தெரிந்திருக்கும். ஆனால் அவரது விசாரணை ரிப்போர்ட்டில் குட்டன் மீது காயங்களே இல்லையென்றும், குட்டன் தற்கொலை செய்துகொண்டுதான் செத்துவிட்டானென்றும் எழுதியிருக்கிறார். அந்த ரிப்போர்ட் நம்பத்தக்கதல்ல என்பது பச்சையாகத் தெரிகிறது. ஆகவே தவறான தகவல் கொடுத்த அவருக்கு சட்டப்படி ஒரு வருட கடுங்காவல் தண்டனை விதிக்கிறேன்" என்று குறிப்பிட்டுள்ளார்.

சர்க்கார் தரப்பில் வாதாடிய பப்ளிக் பிராசிகியூடரின் பெயர் எஸ். பார்த்தசாரதி நாயுடுவாம்.

### துப்பாக்கிப் பிரயோகம்பற்றி விசாரணை கோரினர்

கொழும்பு, டிச. 5—

இலங்கைப் பிரதமர் தகநாயகாவைச் சந்தித்த தொழிற்சங்கப் பிரதிநிதிகள் கோஷ்டி நவாலியாபடியாவில் மாண்டி கிறிஸ்டோ எஸ்டேட்டில் நடைபெற்ற துப்பாக்கிப் பிரயோகம்பற்றி விசாரணை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொண்டுள்ளனர். இங்கு நடைபெற்ற துப்பாக்கிப் பிரயோகத்தில் மூன்று தேயிலைத் தோட்டத் தொழிலாளர்கள் கொல்லப்பட்டனர். பலருக்குக் காயமேற்பட்டுள்ளது. துப்பாக்கிப் பிரயோகத்தைக் கண்டித்து 30 ஆயிரம் தொழிலாளர் கண்டன வேலைநிறுத்தம் செய்தனர்.

## பட்டப்பகலில் துணிகரப் பாங்கு கொள்ளை

### ரூ. 40 ஆயிரம் சூறை

பரோலி, டிச. 5—

நேற்று ஒரு கொள்ளைக்கூட்டத்தினர் இங்கிருந்த அலகாபாத் பாங்கியை பட்டப்பகலில் கொள்ளையடித்தனர். சுமார் ரூ. 40000 கொள்ளையிடப்பட்டதாகத் தெரிகிறது.

பிற்பகல் 2-30 மணிக்கு இவர்கள் காரில் வந்து இறங்கினார்கள். துப்பாக்கிகளை வைத்துக் காவலாளிகளை மிரட்டினார்கள். இருந்த பணத்தை எல்லாம் கொள்ளையிட்டனர். சுமார் 6 பேருக்குத் துப்பாக்கிக் காயம் ஏற்பட்டுள்ளது. அரைமணி நேரத்திற்குப் பிறகு அவர்கள் ஓடி விட்டனர்.

சர்க்கார் ரோட்வே டாக்ஸி ஒன்றை கொள்ளைக்காரர்கள் வாகனமாகப் பயன்படுத்தினார்கள் என்று தெரிகிறது.

கால்சட்டை உட்பட நவீன உடை அணிந்த எட்டுப் பேர் துப்பாக்கிகள் சகிதம் பாங்குக்குள் புகுந்து காவல்காரனிடம் இருந்த துப்பாக்கியைப் பிடுங்கிக் கொண்டனர். இருவர் பாங்கு ஏஜெண்ட் கே. என். மெஷ்ராவை வளைத்துக்கொள்ள மற்றவர்கள் காஷியரிடமிருந்து பணத்தைக் கவர்ந்தார்கள் என்று தெரிகிறது.

டெலிபோன் கம்பிகளையும் அவர்கள் அறுத்துவிட்டனர். கொள்ளையடிக்கப்பட்ட தொகை எவ்வளவு என்று திட்டவட்டமாகத் தெரியாது. சுமார் 40 ஆயிரம் ரூபாய் இருக்கும் என்று கருதப்படுகிறது.



ஹங்கேரிய சர்க்காரின் உதவிச் சட்ட மந்திரியும் புடாபெஸ்ட் பல்கலைக் கழகப் பேராசிரியரும் 4-12-59-ல் சென்னைக்கு வந்தபோது விமான நிலையத்தில் வரவேற்கப்பட்டனர்.

## காங்கிரஸ் மந்திரி பேசும்போது காங்கிரஸ் எம். எல். ஏக்கள் வெளிநடப்பு

### ராஜஸ்தான் சட்டசபையில் அலங்கோலம்

ஜெயப்பூர், டிச. 4—

ராஜஸ்தான் குடிவார திருத்த மசோதாவின் ஷரத்து ஒன்றின் மீது ரெவின்யூ அமைச்சர் விளக்கம் அளிக்கையில், காங்கிரஸ் சட்ட மன்ற உறுப்பினர்கள் சபையிலிருந்து வெளிநடப்புச் செய்தார்கள்.

காங்கிரஸ் அரசாங்கம் கொண்டுவரும் நிலச்சீர்திருத்த மசோதா காங்கிரஸ் சட்டமன்ற உறுப்பினர்களுக்கே பிடிக்கவில்லை. அம்மசோதாவை எதிர்த்தே அவர்கள் சபையிலிருந்து வெளியேறினார்கள். அதனால் சபையில் போதிய அங்கத்தினர்கள் இல்லாமல் போய்விட்டார்கள். ஆகவே சபாநாயகர் சட்டமன்ற நடவடிக்கையை ஒத்திவைத்தார்.

பின்னர் காங்கிரஸ் நிலச்சீர் திருத்தச் சட்டம் பிடிக்காத அச் சட்ட மன்ற உறுப்பினர்கள் மாநில காங்கிரஸ் கமிட்டித் தேர்தலில் கலந்துகொண்டார்கள்.

சட்டமன்றத்தில் ரெவின்யூ அமைச்சர் பேசும்பொழுது எதிர்க்கட்சி உறுப்பினர்கள் மட்டுமே இருந்தனர்.

### தாகூர் பல்கலைக் கழகம்

கல்கத்தா, டிச. 5—

கல்கத்தாவில் விசுவ கவி தாகூரின் பெயரால் ஒரு பல்கலைக் கழகம் துவக்கப்படும். இதில் நாட்டியம், நாடகம், இசை, இலக்கியம் முதலிய துறைகளில் போதனையளிக்கப்படும். இதை நிர்மாணிக்க 13 லட்சம் ரூபாய் செலவாகும்.

### மே. ஜெர்மனிக்கு அணு ஆயுத சப்ளை கூடாது

#### பிரிட்டிஷ் எம். பி.க்கள் எதிர்ப்பு

லண்டன் டிச. 5—

நேடோ ஒப்பந்தத்தின் கீழ் மேற்கு ஜெர்மனிக்கு பிரிட்டன் அணு ஆயுதங்கள் கொடுக்கப் போகின்றது. அங்ஙனம் கொடுக்கக் கூடாதென்று தொழிற்கட்சியைச் சேர்ந்த 80 பாராளுமன்ற உறுப்பினர்கள் கையெழுத்திட்டு ஒரு பிரேரணை கொண்டுவந்திருக்கிறார்கள்.

### நாகை

17-11-59 முதல் 21-11-59 வரையில் நாகையில் வார்டுதோறும் உணவு இயக்கப் பொதுக்கூட்டங்கள் நடந்தன. கம்யூனிஸ்ட் கட்சி, தி மு க. முதலிய சர்கட்சிகள் சார்பில் முக்கியஸ்தர்கள் பேசினர். ப. வெங்கிடாசலம் (எம். சி.), ஜீ. ராமன் கே. வி. ராமன், ஜி. செல்வராஜ் முதலியோர் விலைவாசி கட்டுப்பாட்டை வற்புறுத்திப் பேசினர்.

## பிலிப்பைன் தொழிலாளர்களை அமெரிக்கர் கொலை செய்தனர்

### நாடெங்கும் பெரும் கொந்தளிப்பு

மணிலா, டிச. 5—

பிலிப்பைன் தேசம் அமெரிக்க ஆதிக்கத்திலிருந்து சுதந்திரம் பெற்றது என்பது பெயரளவுக்குதான். உண்மையில் பிலிப்பைன் இன்னும் அமெரிக்கப் பிடிக்குள் அவதிப்படுகிறது. பிலிப்பைன் விமானதளத்தில் அமெரிக்க விமானப் போலீஸாரால் ஒரு பிலிப்பைன் தொழிலாளி சுட்டுக் கொல்லப்பட்டார்.

சுட்ட அமெரிக்கரின் பெயர் ராபர்ட் ராபின்சன் என்றும், சுட்டுக் கொலை செய்யப்பட்ட பிலிப்பைன் தொழிலாளியின் பெயர் டுலெஸ்ரேயஸ் என்றும் "மணிலா கிரானிகிள்" என்றபத்திரிகை செய்தி வெளியிட்டுள்ளது.

#### 25 பேர் படுகொலை

இதுவரை 25 பிலிப்பைன் தொழிலாளர்களை அமெரிக்க விமான தளத்துக்குள் வைத்து, அமெரிக்கர்கள் இம்மாதிரியாக வேண்டுமென்றே கொலை செய்திருக்கிறார்கள் என்றும் மணிலா செய்தி கூறுகிறது. பிலிப்பைன் அதிகாரிகள் இதுபற்றி ஆட்சேபணை தெரிவித்தபோது, விபத்தில் மாண்டுவிட்டதாக அமெரிக்கர்கள் பதிலளித்தார்களாம்.

### மூன்று ஆப்பிரிக்க நாடுகளுக்கு விடுதலை

நியூயார்க், டிச. 6—

பிரெஞ்சு காலனி ஆதிபத்தியத்தின் ஆப்பிரிக்க காலனியாகிய டோகோலாந்தும், இத்தாலியின் காலனியாகவிருந்தசோமாலிலாந்தும் புத்தாண்டில் பூரண சுதந்திரம் பெற்று விடுதலைப் பெறப் போகின்றன. அத்துடன் ஆப்பிரிக்காவிலுள்ள ஐ நா. சபையின் தர்மகர்த்தா பிரதேசங்களும் விடுதலை பெறுகின்றன. இந்நாடுகளுக்கு சுதந்திரம் அளிப்பதென்று ஐ. நா. பொதுச்சபை நேற்று ஏகமனதாகத் தீர்மானித்து தனது இறுதி அனுமதியையும் வழங்கிவிட்டது,

1960ம் ஆண்டு ஏப்ரல் 27ம் நாள் டோகோலாந்து மக்கள் பூரண சுதந்திரம் பெறுகிறார்கள். ஜூலை முதல் நாள் சோமாலிலாந்திலும் சுதந்திரக் கொடி பட்டொளி வீசிப் பறக்கும்.

### வெற்றிலை வியாபாரிகள் மாநில சங்கம்

சென்னை, டிச. 2—

நேற்றிரவு சென்னை மாகாண வெற்றிலை வியாபாரிகள் சங்கத்தின் நடவடிக்கைக் கமிட்டி கூட்டம் ஏ. டி. அப்துல் கபூர் தலைமையில் நடந்தது பாக்கு விலை ஏறிக் கொண்டிருப்பது பற்றி கவலை தெரிவிக்கப்பட்டது. அதன் காரணமாக வெற்றிலைத் தொழில் நசிந்து வருவதால் தக்க பரிகாரம் தேட அரசாங்கம் முற்பட வேண்டுமென்றும் தீர்மானம் நிறைவேறியது.

அடுத்த ஜனவரி முதல் வாரத்தில் மாநில வெற்றிலை வியாபாரிகள் 4-வது மகாநாட்டைக் கூட்டுவதென்றும் முடிவு செய்யப்பட்டது.

### நடக்கஇருப்பவை

#### கோவிந்தவாடி அகரம் விவசாய சங்க பொதுக்கூட்டம்

7-12-59 மாலை 6 மணி-தலைவர்: தே. ந. சின்னய்ய முதலியார்

பேச்சாளர்: மணலிகந்தசாமி, கே. எஸ். பார்த்தசாரதி, ஸி. கே. மாணிக்கம்.

### இன்றைய சினிமா

மதுரை: நியூ சினிமா— தி-டென் கமாண்டு மெண்ட்ஸ்

மதுரை: ஸ்ரீ லக்ஷ்மி— எங்கள் குலதேவி

மதுரை: பரமேஸ்வரி— யானை வளர்த்த வானம்பாடி

மதுரை: ஸ்ரீ தேவி—அவன் யார்

மதுரை: சிட்டி சினிமா— யானை வளர்த்த வானம்பாடி

மதுரை: ரீகல் டாக்கீஸ்— TOM THUMB

செங்கற்பட்டு: கணபதி— மகாதேவி

புதுக்கோட்டை: பழனியப்பா- தெய்வமே துணை

அரியலூர்: நடராஜா— பாகப் பிரிவினை

சோமனூர்: ஸ்ரீ குமார்— தங்கப்பதுமை

சிவகாசி: கனகலக்ஷ்மி— புலி செய்த கல்யாணம்

பொள்ளாச்சி: செல்வம்— பாகப் பிரிவினை

போடி: சென்ட்ரல் அல்லி பெற்ற பிள்ளை

ஊர் லேட் ஹவுஸ்— பாகப்பிரிவினை

திருவனந்தபுரம்: சித்ராடாக்கீஸ்- லவ் மேரேஜ் (ஹிந்தி)

### வானொலி

#### சென்னை 1

8—12—59

காலை முதல் ஒலிபரப்பு

6-55 மங்கள இசை 7-00 துதிப் பாடல்கள் 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள் வானிலை அறிவிப்பு 7-15 தமிழில் செய்தி, 7-30 கே. ஆர். மீனாக்ஷிசுந்தரம் பாட்டு 8-00 மதுரகீதம் 8-15 ஒலிபரப்பு முடிவு.

இரண்டாவது ஒலிபரப்பு

12-30 நடுத்தரப் பள்ளிகளுக்கு 1-00 தேவாரம் 1-15 வாத்ய கோஷ்டி 1-30 கானமஞ்சரி 1-40 ஹிந்தியில் செய்தி 1-50 இசைச் செண்டு 2-00 தமிழில் செய்தி 2-10 உயர்தரப் பள்ளிகளுக்கு 2-40 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

மாலை மூன்றாவது ஒலிபரப்பு

5-30 டி. எஸ். ராதா வயலின் 6-05 பிராந்தியச் செய்திகள் 6-15 கிராம நிகழ்ச்சிகள் 7-15 தமிழில் செய்தி, 7-30 திரைகானம் 7-45 சென்னை 2-ல் உள்ளபடி 8-30 This Week At U N. 8-52 வாத்ய இசை 8-00 இசை மாலை 9-30 வாழ்க்கைப்படகு-நாட்டுப் பாடல் தொகுப்பு (திருச்சி அஞ்சல்) 9-50 அரிய சுவடிகள் சமய நூல்கள் பேச்சு 10-00 இசை அமுதம் 10-30 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு

#### திருச்சி

8—12—59

காலை முதல் ஒலிபரப்பு

7-00 இசைக்கதிர் துதிப்பாடல்கள் 7-10 நிகழ்ச்சிக் குறிப்புகள் 7 தமிழில் செய்தி 7-30 ஒலிப்பதிவுகள் 8-00 ஆங்கிலத்தில் செய்தி 8-15 ஒலிபரப்பு முடிவு.

இரண்டாவது ஒலிபரப்பு

12-30 நடுத்தரப் பள்ளிகளுக்கு 1-00 இசைவேளை 1-40 ஹிந்தியில் செய்தி, 1-50 அலி அக்பர் கான் ஸரோட் 2-00 தமிழில் செய்தி 2-10 உயர்தரப்பள்ளிகளுக்கு 2-40 இடைவேளை 2-45 வானிலை அறிவிப்பு ஒலிபரப்பு முடிவு.

மாலை மூன்றாவது ஒலிபரப்பு

4-45 விவித பாரதி கர்நாடக சங்கீத நிகழ்ச்சி (பம்பாய் அஞ்சல்) 5-45 இசைப்பயிற்சி 6-00 அறிவிப்புகள் 6-05 பிராந்தியச் செய்திகள் 6-15 கிராம நிகழ்ச்சிகள் 7-15 தமிழில் செய்தி 7-30 தமிழ் வளர்ந்த கதை புதுமை இலக்கிய காலம் டி. இ. ஞானமூர்த்தி பேச்சு 7-45 டி. கே. ராதாகிருஷ்ணன் புல்லாங்குழல் (மதராஸில் உள்ளபடி) 9-00 ஆங்கிலத்தில் செய்தி 9-15 காதலும் சாதலும் நாடகம் (மதராஸ் 2-ல் உள்ளபடி) 9-30 வாழ்க்கைப் படகு நாட்டுப் பாடல் தொகுப்பு 9-50 அரிய சுவடிகள் சமய நூல்கள் பேச்சு (மதராஸ் 1-ல் உள்ளபடி) 10-00 ஒலிபரப்பு முடிவு.

ஜனசக்தி அச்சகத்தில் அச்சிட்டு, வெளியிட்டவர் எஸ். கிருஷ்ணசாமி
ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.
முகவரி: 32, பிராட்வே, சென்னை-1
Janasakthi
Broadway Madras-1.